# செங்கிஸ்கான்

## தங்கவேலர்

திராவிடன் பதிப்பகம்

P. B. No. 18, வேலூர் (வ.ஆ.)

# முன்னுரை

எங்கும் கல்விக்கூடங்கள் கட்டப்பட்டன; மக்கள் பயிற்றுவிக்கப்பட்டனர்; நூல்கள் அச்சியற்றப் பட்டன; சிந்தனையாளர்கள் பெருகினர். நாளாக நாளாகக் கடந்த பொருளிடத்திருந்த நம்பிக்கை குறைந்தது; காலவேகத்திலே மனிதன் தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளவும், தன்னம்பிக்கை கொள்ளவும் வேண்டும் என்ற கருத்து மக்களின் மனத்தில் பதிந்தது. இருளும், காட்டுமிராண்டித் தன்மையும், குருட்டு நம்பிக்கையுங்கொண்ட நிலையிலிருந்து இயற்கை ஒளி வெளிக்கிளம்பியது. விடுதலை உணர்வு உள்ளத்தில் இடம் பெற்றது; உயிர் அதன் சக்தியைப் பற்றிக் கனவு காணத் தொடங்கிற்று. எங்கு பார்க்கினும் கண்டு பிடிப்பும், ஆராய்ச்சியும் வலிவுள்ள கருத்தும் தோற்ற மளிக்கத் துவங்கின!

.........இங்கர்சால்

* * *

அறிவு ஒளி நாட்டிலே படிப்படியாகப் பாய்ச்சப்பட்டு வந்த நிலையைத்தான் அறிஞருலகின் இதயகீதம் இங்கர்சால் படம்பிடித்துக் காட்டியிருக்கிறார். எண்ணங்களின் கருவிலே புதிய கருத்துகள் உருவாகின! சிந்திக்கத் தெரிந்த அறிவுலகம் புதுமைக் கருத்துக்களை உணர்ந்து கொள்வதிலே உவகையாகிக் கிடந்தது! அந்தச் சிந்தனை உலகுக்கு "அறிவு விருந்து" பலவகையாக எத்தனையோ கோணங்களிலிருந்து நடத்தப்பட்டு வருகிறது. அந்த முறையிலே இடம் வகிப்பதுதான் கட்டுரை இலக்கியம். நாடகத்திலே தெளிவுக் கருத்துகளை உதிர்ப்பதன் மூலமாக, கதைச் சோலையிலே காலத்தை ஓட்டிய கற்பனைக் கனிகளைக் குலுங்கச் செய்வதன் மூலமாக, கவிதைபுரியிலே இலக்கியத் தென்றல் இனிமை புரிவதன் வாயிலாக......இன்னும் இது போன்ற பலப்பல முறைகளிலே புதுமைத்தாகம் தீர்க்கப்பட்டு வந்திருக்கிறது. அந்தப் புதுமைப் பணியோடு தனது செயல் அத்தியாயத்தையும் ஓட்டிக்கொண்டிருப்பதுதான் கட்டுரை இலக்கியமும்.

நாட்டையும், மக்களையும், சம்பவங்களையும் பிரித்தெடுத்துக்காட்ட......கட்டுரை இலக்கியம் காலக் கண்ணாடியாகப் பயன்படுகிறது. மறு மலர்ச்சி இயக்கம் நமது நாட்டிடைத் தோற்று விக்கப்படாத நேரத்திலே "கட்டுரை இலக்கியம்" இலக்கிய வரிசையிலிருந்து சரிவுற்றுக் கிடந்தது. எனவே, இலக்கிய மேதையாக வளர்ந்தவர்களின் பார்வையிலே கட்டுரை இலக்கியம் மிகச் சாமானிய மாகத்தான் பட்டுவந்தது! எழில் மிகு முறை யிலே இலக்கியச் சந்தையிலே கட்டுரை இலக் கியம் குவிக்கப்படாத காரணத்தால் அதைச் சுவைப்பதற்குக்கூட மக்கள் கசந்து வந்தனர். அந்தத் தவறான எண்ணம் தமிழகத்திலே...... திருவிடத்திலே......காலப்போக்கிலே திருத்தி யமைக்கப்பட்டது, மறு மலர்ச்சி இலக்கிய சிருஷ்டிகர்த்தாக்களின் பெரு முயற்சியால்!

அந்தத் தூயவர்களின் முயற்சி இன்று இங்கு வளர்ந்துவிட்டிருக்கிறது. விரல் விட்டு எண்ணி விடக்கூடிய அளவிலே இருந்திட்ட கட்டுரை இலக்கியம் இன்று மலையெனக் குவிந்திருக் கின்றது. மகத்தான இந்த மறு மலர்ச்சிப் பணி யைச் செய்து முடித்தவர்களிலே முன்னணியிலே

முறுவல்பூத்து நிற்பவர் நம் அறிஞர் அண்ணா! கட்டுரை இலக்கியத்திலே அண்ணாவின் பேனா நர்த்தனம் புதுமெருகைப் பாய்ச்சியது. கோபுரத்திலே காட்சிப் பொருளாக இருந்த இலக்கியம்......குப்பைமேட்டு ஏழையரும் புரிந்து கொள்ளுகின்ற மாற்ற நிலையை யடைந்தது. பொற்காலம் உதயமானது. கருத்துச் சோலையிலே இலக்கியக் குயில் கூவத் தொடங்கிற்று. கட்டுரைகள்...சம்பவங்களையும் நாட்டையும் அறிமுகப்படுத்தின.

இங்கு இப்போது எனது கட்டுரைகளைத் தொகுத்துப் புத்தகமாக்கி வெளியிட்டிருப்பதன் நோக்கமும்........சம்பவங்களையும், நாட்டையும் அறிமுகப்படுத்தி வைப்பதற்காகத்தான்! அந்த அற்புதப்பணியிலே செயலை உருவாக்கி உங்கள் உள்ளத்தையும், என்போன்ற எழுத்தாளத் தோழர்களின் இதயத்தையும் மகிழ்ச்சி அலையிலே மிதக்கவைக்கும் **திராவிடன் பதிப்பகத்தாருக்கு** வாழ்த்தைக் குவிக்கின்றேன்.

**6–2–'52**
**திண்டுக்கல்**

**மா. தங்கவேலர்.**

# செங்கிஸ்கான்

என் அன்புத் தோழா! என் இதயத்தை அழுத்திக் கொண்டிருக்கிற பாரத்தைச் சிறிதாவது குறைத்துக் கொள்ள உன்னை ஒரு சுமைதாங்கியாக எண்ணி இறக்கி வைக்கிறேன்! நான் வீரன்—எனது தீரத்தால் பல ஆற்றலரசர்களை அடிபணியச் செய்திருக்கிறேன்! ஆயிரமாயிரமாகப் படைவீரர்கள் நானிட்ட கட்டளையை முடித்துத் தரத் தயாராக உலாவிக் கொண்டிருக்கிறார்கள்! அரக்கன்; முரடன்; இதயமே இல்லாதவன் என்றெல்லாம் என் வீர விளையாட்டின் தாக்குதலைத் தாங்கச் சகியாத கோழைகள் கூறிக் கொண்டிருப்பதுண்டு. ஆனால், ஆச்சரியம்! எனது இரும்பு இதயத்தைத் தன்பக்கமிழுத்துக் கொள்ளக்காந்தத் துண்டு ஒன்று எங்கிருந்தோ வந்து சேர்ந்தது! இப்போது என் இதயம் அந்தக் காந்தத் துண்டின் வசம். நான் இப்போது உண்மையிலேயே இதயமில்லாதவனாகத்தான் உலவுகிறேன்.

நண்பரே, புதிரல்லவா போடுகிறீர்! புரியவில்லையே. இரும்பு, காந்தம் என்று எதை எதையோ உவமை காட்டு கிறீரே! நடப்பு நிகழ்ச்சிக்கு வர மழுப்புகிறீரே!

வாழ்க்கைப் புயலிலே சிக்கித் தவித்துக் கொண்டிருப்பவன் நான்! என் வேதனை அத்தியாயத்தை நீண்ட தொகுப்பாக்கிக் கூறிக்கொண்டே செல்வதுதான் பரவி வரும் தொல்லைக்கு வேலி போட்டதாக ஆகும்! உமக்கு ஆத்திரம், ஆச்சரியம், ஆவேசம் எல்லாமாகச் சேர்ந்து என் உள்ளக் கருத்தினை விழுங்கிவிட வேண்டுமென்ற ஆசை இருக்கிறது. ஆனால், நானோ நின்று நிதானித்து என் வேதனை அத்தியாயத்தை வரிக்கு வரி நீ சுவைக்கும்படி கூறப் போகிறேன்! இந்த மாலை நேரம், தென்றலின் தழுவலிலே அணைந்திருப்போரை அந்த நிலையிலேயே அழைத்துச் சென்று இன்ப புரியிலே உலவிடச் செய்து கொண்டிருக்கிறது. நாமோ ஊரின் ஒதுப்புறத்தில்! அங்கே தொலை தூரத்தில் நமது படைவீரர்கள் மாலையின் லீலாவினோதத்தோடு போட்டி போட்டுக் குலவுகின்றனர். எங்கும் இன்பமயம்—என் இதயத்தைத் தவிர..

நண்பரே, உங்கள் இதய பாரத்தை தணித்துக் கொள்கிற ஆர்வத்திலே என் இதயத்திலே பெரிய பாரம் குடி புகுவதைக் காண மறந்து போகிறீர். உங்கள் வாழ்விலே புயல் வீசுகிறதென்று கூறுகிறீர்......ஆனால், என்ன புயல் என்று விளக்கங் கூறப் பீடிகைகளைப் போட்டுக் கொண்டே போகிறீர்! புயலின் தன்மை, அது சுழன்றடித்திடும் மேன்மை பற்றியெல்லாம் கூறிக்கொண்டே செல்லுகிற நீங்கள் உங்கள் சிந்தனையைச் சிதறடித்த சம்பவத்தை அந்த வேதனைச் சித்திரத்தை மட்டும் படம் பிடித்துக் காட்டினால் அதுவே போதுமானது. இந்த எனது விருப்பத்துக்கு ஏற்ற முறையிலேயே இப்போது சூழ்நிலை உலவுகிறது. அதோ பாருங்கள்! மழைக் காற்று பரவி வருகிறது. துரிதமாக நமது கூடாரம் நோக்கிச் செல்ல வேண்

டும். ஆனால் அதைவிடத் துரிதமாக அந்த வேதனை அத்தியாயத்தைக் கூறிட வேண்டும்.

அபலையின் லீலா விநோதத்தை மழைக்காற்று இப்போது மறைய வைத்து வருகிறதே, இதைப் போலத்தான் வாள் வீரனை என் வாழ்வு வீர விளையாட்டுக் கதையாக வளர்ந்து வந்தது. ஆனால், என் வாழ்வையும் வேதனை வலை வீசித் தன் பக்கமிழுத்துக் கொண்டது. நண்பரே, காலம் நம்மை வஞ்சித்துக் கொண்டிருக்கிறது. பலபல கூற நேரமுமில்லைதான். இதோ ரத்தனச் சுருக்கம்........அழகி யுலனேவைப் பார்த்திருக்கிறாயல்லவா? அந்த அழகு ராணி நான். அந்தக் காந்தமணிதான் இந்த இரும்பு இதயத்தையும் இழுத்துக் கொண்டாள். வாள் ஒளியைய மங்கிவிடச் செய்யும் அந்த விழி அழகி என்னவள் ஆனால்தான் என் வீரப் பாதையிலே அச்சமின்றி இனியும் ராஜா நடை போட வேண்டுமானால் யுலனே கேடயம் என் அருகில் இருந்தால் முடியும்...!

நண்பரே! ஆபத்தான பாதையில் கால் வைத்து விட்டீரே, அப்பப்ப! யுலனே...அந்தப் பெயர் என்னைத் திகிலடைய வைத்துவிட்டதே! உங்கள் வேதனை மாளிகை காதல் அஸ்திவாரத்தால் எழுப்பட்டுத்தானிருக்குமென்று எனக்கு முன்னரே தெரியும். என்றாலும் யுலனே மீது உங்கள் காதல் அம்பு பாயுமென்று நான் கனவிலும் கருதியவளல்ல. வாலிபப் பருவம்...வாழ்க்கைக்குத் துணைதேடி அலைவது இயல்பு தான்—முறையுங்கூட. ஆனால், உங்கள் எண்ணப் பறவை யுலனேவைச் சுற்றி வட்டமிட ஆரம்பித்திருக்கிறது! யுலனே யார் என்று நான் கூறியா நீங்கள் புரியவேண்டும்? மெர்க்கிட்ஸ் கூட்டத் தலைவன் நம்மீது கொண்டிருக்கும் பகையை மறக்க மறுக்கிறானே, அந்தப் பிறவிப் பகைவனின் அருமை மகளை உன் ஆசை நாயகியாக்கிக் கொள்ள ஆவல் கொண்டு விட்டீரே!

தித்திக்கும் திராட்சை—ஆனால் அது—பகைவனின் தோட்டத்திலே! மயக்கும் மணத்தை வாரி வீசும் மலர்த்

தோட்டம்—மாற்றானிடத்திலே! திராட்சையும் மலரும் நமக்கு வேண்டாதவர் வசத்திலே முடங்கியிருக்கிறதென்ற காரணத்துக்காக நமது விருப்பத்தை அறுத்துக் கொள்வதில்லையே. எழிலும் சுவையும் தரும் யுல்னு மெர்க்கிட்ஸ் கூட்டத்தலைவனின் தோட்டத்திலே விளைந்த கனி...அதை நான் ருசி பார்க்க முயற்சிப்பதிலே யார்தான் தடைபோட முடியும்? அவளின் தந்தை எனக்குப் பகைவன் என்ற காரணத்துக்காக என் எழிலோவியத்தை இழந்து விடுவதா?

நண்பரே! நல்லபாம்பிடம்—மாணிக்கம், கடலுக்கடியிலே முத்து, முள்ளிற் கிடையிலே அழகு ரோஜா இருப்பது போல மெர்க்கிட்ஸ் கூட்டத்தாரிடையே உன் அழகு ஓவியம் புதைந்து கிடக்கிறது. மாணிக்கத்தை விரும்புகிற உள்ளம்—நாகத்தின் சீற்றத்தையும் தாங்கிக் கொள்ளும் சக்தி படைத்ததாக இருக்க வேண்டும். முத்து வேண்டுமானால் ஆழ்கடலுக்குள்ளே போராடித்தானாக வேண்டும். நீங்கள் போராட்டக் காதலராகி விட்டீரே என்பதற்காகத்தான் வேதனைப் படுகிறேன். உங்கள் காதலின் வெற்றி—வாள் முனை வலிவிலே யிருக்கிறது. ஓய்ந்திருக்கும் நமது வீரர்களுக்குப் புதியகளம் அமைத்துத் தருகிறீர். ஆமாம்; புதிய களம் அமைத்துத்தானாக வேண்டும் உங்கள் காதல் வெற்றிபெற வேண்டுமானால்......!

தோழரே, இதுவரை எண்ணற்ற போராட்டங்கள் எந்தெந்தக் காரணத்துக்காகவோ நடத்தி வெற்றியும் கண்டிருக்கின்றேன். ஆனால், என் காதலுக்காக ஒரு வீரப் போராட்டம் நடத்துவதிலே நமது வீரர்கள் பெருமையடையத்தான் செய்வர். என் எழிலரசியுடன் காதல் பாதையிலே நான் இன்ப நடை பயிலுவதைக் காண அவர்களுக்கும் இன்பம்தானே......

மங்கோலியரின் ஒரு பிரிவைச் சார்ந்த யுர்ட்ஸ் என்ற கூட்டத்தாரின் தலைவனை எசுகை என்பானுக்கும்

அவன் தோழனுக்குமிடையே நடந்த உரையாடல்தான் மேலே தீட்டிப்பட்டிருப்பது. மங்கோலிய வமிசத்தின் மறு பிரிவைச் சார்ந்த மெர்க்கிட்ஸ் கூட்டத்தலைவனின் அழகு மகளை எசுகை காதலித்தான். இந்த இரண்டு கூட்டத் தலைவர்களும் வமிசத்தால் ஒன்றுபட்டவர்கள்—ஆனால், கருத்தால் மாறுபட்டவர்கள். குரோத சக்தியை இருவருள்ளத்திலுமே நடமாடவிட்டுக் கொண்டிருந்தனர். சம்பவங்கள் இந்த முறையிலே சதிராடிக் கொண்டிருந்த போதுதான் எசுகையின் உள்ளத்திலே யுலனே ஆட்சி செய்யத் துவங்கினாள். அந்த அழகுத் தேவி வீசுகிற அம்பிலிருந்து தப்பித்துக் கொள்ள எசுகை எத்தனையோ வழிகளைக் கடைபிடித்து அந்தப் பாதைகளிலெல்லாம் நடந்து பார்த்தான். கடைசியாக யுலனேவின் தந்தையிடம் தூது அனுப்பிக் கூடப்பார்த்தான் தன் வெட்கத்தை விட்டு—வீரத்தை மறந்து. ஆனால், மிடுக்கு மிகக் கொண்டு மெர்க்கிட்ஸ் கூட்டத் தலைவன் எசுகையின் இதயம் தேய்ந்துகொண்டு வருவதைக்காண மகிழ்ந்ததோடு நிற்கவில்லை. அந்தத் தேய்ந்த இதயத்தையும் தனது புதிய சொல்லம்பால் துளைத்தான்....யுலனேவின் நிழலைக் கூடத் தொடர்ந்து வர எசுகைக்கு யோக்யதை கிடையாதெனக் கேலி பேசினான்.

அந்தக் கேலிக் குரல் எசுகையின் இலட்சியத்தை அதன் முடிவு நோக்கி வேகமாகத் துரத்தியது! வாஞ்சையோடு பேசியும் வழிக்கு வராதவனை வஞ்சகத் திட்டத்தால் வீழ்த்த எசுகையின் உள்ளம் துள்ளித்திரிந்தது. ஓர் நாள் இரவு. நிலவு காய்ந்து கொண்டிருந்தது. நீண்ட உரக்கத்திலே தன்னை மறந்தவர்களாகி யிருந்தனர் எசுகையின் படை வீரர்கள். எசுகை தனது குதிரையிலே அமர்ந்து மெர்க்கிட்ஸ் கூட்டத்தாரின் கூடாரத்தை நோக்கி விரட்டினான்! கூடாரத்தில் உள்ளம் குமுறிக் கொண்டிருந்த யுலனே குதிரையின் காலடி ஓசையைக் கேட்டு மகிழ்ச்சி துள்ளத் தலையை வெளியே நீட்டினாள். கூடாரத்தை உராய்ந்த

குதிரை நின்றது. அவனுக்காகவே பிறந்து மலர்ந்திருந்த யுலனோவை எசுகை வாரி அணைத்துக்கொண்டான். குதிரை பறந்தது பனிமூடிய பாறைகளைக் கடந்து கொண்டே! பனிப் பாறையிலிருந்து வீசிய குளிர் காற்று...எசுகை யுலனோ இருவருக்குமிடையே துளைத்துச் செல்லச் சக்தியற்றுக் கிடந்தது!

காலை மலர்ந்தது—இரவு முழுதும் காதல் மொழி பேசி களைத்துப் படுத்திருந்தனர் எசுகையும் யுலனோவும் யுர்ட்ஸ் கூட்டத்துக் கூடாரத்திலே. அங்கே மெர்க்கிட்ஸ் கூட்டத் தலைவன் கர்ஜித்துக் கொண்டிருந்தான் அவமானம் தாங்காத முறையிலே! தனது அழகு மகள் எசுகையால் கொள்ளையிடப்பட்டதையறிந்து பழிக்குப் பழி வாங்கச் சந்தர்ப்பத்திற்கு ஏங்கி நின்றான்!

எசுகையும்—யுலனோவும் காதல் பாதையிலே நடை போடுவது கண்டு எசுகையின் படை வீரர்கள் இன்ப கீதம் இசைத்துக் கொண்டிருந்த நேரத்திலே வேற்று நாட்டுப் பகைவன் யுர்ட்ஸ் கூட்டத்தின் மீது போர் தொடுத்தான். களத்திலே தனது படை வீரர்கள் இரத்தத்தைச் சிந்திக் கொண்டிருக்கும் போது தான் மட்டும் யுலனோவோடு சிரித்து மகிழ்ந்து சிருங்கார மொழிகளைச் சிந்துத்துக் கொண்டிருப்பது எசுகைக்குப் பிடிக்கவில்லை. யுலனோவிடம் விடை பெற்றுக் கொண்டு ஏசுகை களத்திலே புகுந்தான்! எசுகையின் வாள் வலிமை கடுமையான போராட்டத்துக்குப் பின் வெற்றியை வாங்கித் தந்தது! எசுகையை இறுதிவரை எதிர்த்துத் தன் வாள் வீச்சை எசுகையே அதிசயிக்கும்படி வீசிக் காட்டிய டெமுசின் என்ற வீரனைப் போரின் முடிவிலே கைது செய்து யுர்ட்ஸ் கூடாரத்தை நோக்கியே அழைத்து வந்திருந்தான்!

எசுகை போர் முடிந்து திரும்பியதும் அவளின் பிரதி பிம்பத்தை யுலனோ அவனுக்களித்தாள். ஆம்; எசுகை வீரத் தந்தையானான். போராட்டத்திலேயே வளர்ந்து

போராட்டமாகவே மலர்ந்த எசுகையின் காதல் மீண்டு மொரு போராட்டத்தாலேயே முழு மலர்ச்சி பெற்றது டெமுசினோடு போர் செய்து கொண்டிருந்த நேரத்திலே. எனவே தனது போராட்டக் காதலின் முதல் காணிக்கை யாக அரும்பு விட்ட அந்தக் காதல் கனிக்கு இறுதிவரை வீரத்தோடு போராடிய டெமுசினின் பெயரையே சூட்டி ஞன்.

சிறுவன் டெமுசின் எசுகை—யுலனேவின் அன்புப் புதையல்—வளர்ந்து கொண்டே வந்து வாலிபப் பரு வத்தை எட்டிப் பிடித்தான்! வீர விளையாட்டுக்கள் டெமு சின் தந்தைக்கே ஆச்சரியத்தை தந்தன. யாரும் கண்டிராத புதிய வாள் வீச்சை யெல்லாம் அலட்சியமாக வீசி—மங் கோலிய பரம்பரையிலே அதுமாதிரியான தொரு வீரனைப் பார்த்திராத அளவிலே கதிகலங்கச் செய்து கொண்டிருந் தான் டெமுசின்.

டெமுசின் என்ற அந்தப் பெயர் தன் தந்தையோடு முன்னரொரு சமயம் போரிட்டுத் தோற்ற வீரனின் பெயர். அவன் போரிட்டது யாருடன் என்பதல்ல கவனத் திற்குரியது. ஆனல், அவன் தோற்ருன். போரிலே தோற்று விட்ட ஒருவனின்—அவன் எவ்வளவு பெரிய வீரனுகயிருந் தாலும்—அந்தப் பெயரை நமக்கு நாமே சூட்டிக்கொள்வது வீரமுமல்ல—அறமுமன்று. எனவே. டெமுசின் என்ற என் பெயரை விட்டெறிந்து விட்டு வீரப் பெயராகச் செங் கிஸ்கான் என்ற பெயராலேயே இனி என்னை உலகம் அழைக்கட்டும் என்ற புரட்சிப் பெயரைத் தனக்கென அமைத்துக் கொண்டு போராட்டங்களிலே குதிக்கத் துவங் கினன் மாஜி டெமுசின்.

மங்கோலியர்களின் மாற்றுப் பிரிவினர் எசுகையை எந்த விதத்திலும் தோற்கடித்து அவனின் வாள் வலி மையைத் தங்களது காலடியிலே அடிபணியச் செய்துவிடத் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்த நேரம் ..இந்தநேரம்

பார்த்து அவர்களது ஆத்திரத்தை மேலும் வளர்த்திடு வதுபோல செங்கிஸ்கான் பாரையே கதிகலங்க அடித்து வந்தான். புயலை அடக்கிடலாமென எண்ணிக்கொண் டிருந்த நேரத்திலே மீண்டுமொரு புதுப் புயல் வீசுவது போலானது செங்கிஸ்கானின் பகைவர்களுக்கு.

எசுகை—மலர், மலர்ந்து மணம் வீசியது. இதோ மக்கி மடியப் போகிறது. சிறிது நேரத்திலே கருகிய மலராகிடப் போகிறதென மாற்றுத் தோட்டக்காரன் மகிழ்ந்துகொண் டிருந்தபோது புதிய மலர் மணம் பரப்ப எசுகைத் தோட்டத்திலேயே அரும்புவிட்டது. களித்திருந்த கூட்டம் கனலைக் கக்கியது.

பலநாடுகள் செங்கிஸ்கானின் வாள் நிழலிலே நடுங் கிக் கொண்டிருந்தன. அவனின் வீரப்பாதையிலே ஒரு அழகு மாளிகை. அந்த மாளிகைக்குள்ளே வீர உலாவந்த செங்கிஸ்கானையும் கைதியாக்க ஒரு கிளிமொழி இருக்கத் தான்செய்தாள் பூர்தை என்ற அழகுப் பெயரிலே! பூர்தை யின் பூரணப்பொலிவு பூனையிடம் சிக்கிய எலியாக்கி விட் டது செங்கிஸ்கானை. மாவீரன் செங்கிஸ்கானைத் தனது அழகு மகள் காதலனாக ஏற்றுக்கொள்வதிலே பூர்தையின் தந்தை பூரிப்பை எட்டிப் பிடித்தார். காதல் பாதையிலே நடந்து பழகியிருந்த எசுகையும் தனது மகனின் விருப்பத் திற்குத்தடையாகி நிற்கவில்லை! பூர்தையின் தந்தையினது ஆசிமொழிகளோடும் தன் தந்தையின் ஆர்வ அலையோடும் தனது வாழ்க்கைவிழாவைத் துவக்கக் காத்திருந்த நேரத் திலே இன்ப நிலா ஓடி ஒளிந்து கொண்டது. கும்மிருட்டு பவனிவரத் துவங்கியது. அழகு லீலையில் அவன் லயித் திருந்த வேளை. அந்தத் துயரச் செய்தியை வீரனொருவன் தன் தந்தையிடமிருந்து கொண்டு வந்திருந்தான்.

சூதுமதிகொண்ட ஒருவனால் எசுகை விருந்துண்ட போது அந்த விருந்திலே விஷமிடப்பட்டிருந்த துயரக் கதையைத் தூதுவந்த வீரன் செங்கிஸ்கானிடம் கூறிவிட்டு

அழுது நின்றான்! துயரமொழுகும் இதயத்தோடு மின்னல் வேகத்திலே செங்கிஸ்கான் பயணம் செய்தும் முடிவில் மாண்டு கிடந்த மாவீரன் எசுகையின் உடலைத்தான் அவன் தழுவமுடிந்தது. அவன் தந்தையின் பரிதாப மரணத்தின் முன்னே புதிய கடமை விரிந்தது. வீரனை வஞ்சகத்தால் வீழ்த்திய வீணனைப் பழிவாங்கிவிட அவனின் உள்ளம் துள்ளிக்கொண்டிருந்தது. அந்த இலட்சியத்தை இலகுவிலே முடித்திடுவதற்காக......அழகுமொழி பேசி அவனுள்ளத்தில் காதல் கனலை வளர்த்துவிட்ட அந்த ஆசைக் கிளியையும் சில நாள் மறந்திருந்து புதிய போரை —பழிவாங்கும் படலத்தைத் துவக்கச் செங்கிஸ்கான் தயாரானான்!

எசுகை மறைந்ததற்குப் பின்னர் அவன் விட்டுச் சென்ற படைவரிசையை ஒழுங்குபடுத்தி அணிவகுப்புச் செய்யும் பணியிலே செங்கிஸ்கான் முழு முயற்சியோடு ஈடுபட்டான்! எசுகையின் படையிலே வயது முதிர்ந்த ஓரிருவரிருந்தனர். அந்தப் பெரிய தலைகள் சிறுவனாகப் பாவித்திருந்த செங்கிஸ்கானின் தலைமையிலே படையில் அணிவகுத்திருக்கப் பிரிந்து சென்றனர்! அவர்களைத் தொடர்ந்தே படை வரிசையும் சிறுகச்சிறுகச் சரிய ஆரம்பித்தது. தனது வீரத்தையும் தந்தையின் செல்வாக்கையும், பழிதீர்க்கவேண்டிய கடமையுள்ளத்தையும் பலபட செங்கிஸ்கான் விளக்கிக் கூறியும் மீண்டும் துண்டுபட்ட வீரர்கள் ஒன்றுசேர மறுத்தனர்! மிஞ்சியுள்ள படை வீரர்களோடு எங்காவது ஓடி மறைந்து கொள்ளலாமென செங்கிஸ்கானின் தாய் யுலனோ மன்றாடினாள் எதிரிகளின் அணிவகுத்த படை புயல் வேகத்திலே தாக்கி வருவதைக் கண்டு!

செங்கிஸ்கான் யுலனோவை மட்டும் சில வீரர்களோடு எங்கோ பந்தோபஸ்தாக அனுப்பிவிட்டு எஞ்சியுள்ள மிகச் சிறிய வீரர்களோடு அணிவகுத்து எதிரிகளின் பெரிய தாக்குதலைத் தாங்கி வந்தான். தாக்குதல் பெரிய

அளவிலே விரியவே செங்கிஸ்கானின் படை மறைந்து விட்டது—செங்கிஸ்கான் தனிமையிலே விடப்பட்டான். தன்னைத்தானே காத்துக் கொள்ள வேண்டிய சூழ்நிலை அவனுக்கு வளரவே கோபி பாலைவனத்தின் பனிப் பாறைகளிலே போய் மறைந்திருந்து பசியோடும், குளிரோடும் போராடி வாழ்வைத் தேய்த்துக் கொண்டிருந்தான். தொடர்ந்து இதே நிலையை ஓட்டிக்காட்ட இயலாத காரணத்தால் பனிப்பாறையைச் சுற்றி முற்றுகையிட்டிருந்த எதிரிகளிடம் செங்கிஸ்கான் சிக்கிவிட்டான்.

சிங்கத்தை—கூண்டிலே அடைத்து விட்டார்கள். மாங்கோலிய சிங்கம் எதிரிப் படைத்தலைவனின் முன்னே கொண்டு வரப்பட்டுச் சித்திரவதை செய்யப்பட்டது. படையின் பிரதம தளபதியிடம் செங்கிஸ்கானை அன்றைய இரவே கொண்டு செல்ல ஏற்பாடுகள் துரிதமாகின. செங்கிஸ்கானின் தலையிலே 'காங்க்' என்ற சித்திரவதைக் கருவியைச் சுமத்தி நடத்திச் சென்றனர். நள்ளிரவிலே கூடாரமொன்றிலே அவர்கள் முகாமிட்டனர். நடுநிசி உறக்கத்தில் வீரர்கள் இருந்த நிலையை தான் தப்பி ஓடச் சாதகமாக்கிக் கொண்டான் செங்கிஸ்கான். அவன் தப்பி ஓடும்போதே சில வீரர்களைத் தாக்கிட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு அவர்களோடு கடும் போராடிப் பின்னர்த் தப்பி ஓடியேவிட்டான்.

செங்கிஸ்கான் தப்பியதும், பூர்தையின் தந்தையின் உதவியைக் கொண்டு புதியபடை அமைப்பை ஏற்படுத்தத் திட்டமிட்டான். அவனின் அந்தத்திட்டம் எண்ண அளவோடேயே அறுந்துவிட்டது. தனது ஆசைக் காதலி பூர்தையினுடைய தந்தையின் தயவை நாடுவது தான் கோழை என்பதை எடுத்துக் காட்டுவதாகுமென்ற விளக்கத்தை அவனுக்கு அவனே சொல்லிக் கொண்டு அந்த நிலையை எண்ணி வெட்கப்பட்டான். பின்னர் புதிய புரட்சிகரமான சிந்தனைகளை உள்ளத்திலே அலைமோத விட்டான். அந்த ஆர்வ அலைகளையெல்லாம் செயல்

படுத்த முழு முயற்சியுடன் செங்கிஸ்கான் பணியாற்றத் துவங்கினான். அவனின் ஓயா உழைப்பு—பல புரட்சி வீரர்களைச் செங்கிஸ்கானோடு அணிவகுத்திடச் செய்தது சிதைந்து பரவிக்கிடந்த படை வரிசை மீண்டும் உருவாக ஆரம்பித்தது. மாஜி வீரனாகப் போய்விடுவோமோ வென மனங்கலங்கியிருந்த செங்கிஸ்கானே கூட மகிழ்ச்சி கொள்ளும் அளவிலே. அவன் பெயர் மீண்டும் மாவீரர் பட்டியலிலே தனியொரு இடத்தைத் தேடிப் பிடித்துக் கொண்டது தனது செயல் வீரர்களின் துணையால், பல நாடுகள் செங்கிஸ்கான் ஆளுகையிலே வந்து ஒட்டிக் கொண்டன.

பெய்கல் (Baikal) என்று கூறப்படும் ஏரியிலிருந்து மஞ்சுகுவோ (Manchukuo) என்ற பெயரமைந்த இடம் வரை செங்கிஸ்கானின் கொடி வெற்றி கீதமிசைத்துப் பறந்து கொண்டிருந்தது! வெற்றி வளர வளர செங் கிஸ்கானும் சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டான். அந்த ஓய்வு நேரம் கடந்தகால காதல் பாதை யிலே கொண்டு போய் நிறுத்தி அவனைத் திக்கு முக்காடச் செய்தது. அன்றோடு ஐந்து வருடங்களாகின அவனது அழகுத் தேவி பூர்தையின் திருமுகத்தைக் கண்டு! தனக்காக ஒருஅன்பு இதயம் அங்கே ஐந்து ஆண்டுகளாகத் துடித்துக் கொண்டிருந்ததை அவன் நினைவுபடுத்திக் கொள்ளாமலிருந்ததில்லை...........என்றாலும் பூர்தையின் தந்தையின்முன் தான் ஓர் சுத்த வீரனாகச் சென்று பூர்தை யின் அன்புக் காணிக்கையாகப் பெறும் நாளையே அவன் எதிர்பார்த்திருந்தான். அந்த நாளும் மலர்ந்தது—மலர்ந்த அந்தப் பொன் நாள்தான் பூர்தையை நோக்கி ஓடோடும்படி செங்கிஸ்கானை விரட்டியது!

நாடு பலவற்றை வென்று வெற்றி வீரனாக மீண்டும் தன் மாளிகையின் முன்வந்து நின்ற செங்கிஸ்கானுக்கு பூர்தையைப் பரிசாக அளித்தான்—அவனின் தந்தை! அந்தக் காதல் ஜோடிகள்—இருண்டு கிடந்த கண்ணீர்

வடித்த நாட்களுக்கெல்லாம் முடிவு கூறிவிட்டு இன்ப வாழ்விலே ஒருவரை மற்றவர் மறந்தவராக—இருவரும் ஒருவராக—மாறி காதல் கடலிலே மூழ்கி நீந்தினர்!

உல்லாசப் பயணத்தைப் பல இடங்களில் முகாமிட்டுச் சுவைத்து சென்று கொண்டிருந்தனர். ஓர்நாள் இரவு. வானவீதியிலே முழுநிலவு இன்பநடை போட்டவேளை... செங்கிஸ்கானும் பூர்தையும் இன்பக்கதை பேசியிருந்தனர் கூடாரத்திலுள்ளே! அவன் படைவீரர்கள் உறக்க மெனும் உல்லாசியின் அடிமையாகிக் கிடந்தனர். இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக்கொண்டு மெர்க்கிட்ஸ் கூட்டத்தார் தாக்குதலைத் துவங்கினர். பெரியதோர் சேதம் செங்கிஸ்கானின் படைக்கு ஏற்பட்டது. படை சிதைந்து கொண்டிருந்தது. அவர்களை ஒன்று சேர்த்து எதிரிகளை விரட்டும் முயற்சியிலே கூடாரத்தை விட்டுச் செங்கிஸ்கான் வெளியேறினான். பூர்தை தனிமையிலே விடப்பட்டாள். அந்த நிலையைத்தான் நள்ளிரவிலே தாக்குதலைத் துவங்கிய மெர்க்கிட்ஸ் கூட்டம் விரும்பி யிருந்தது. பூர்தை பல வந்தமாக மெர்க்கிட்ஸ் கூட்டத் தாரின் குதிரையிலே ஏற்றப்பட்டு தூக்கிச் செல்லப் பட்டாள். அதைத் தொடர்ந்தே......தாக்குதலை விட்டு விட்டு மெர்க்கிட்ஸ் படைவீரர்களும் தாங்கள் நாடிவந் ததை முடித்துக் கொண்டு ஓடிவிட்டார்கள்.

திரும்பிக் கூடாரம் சேர்ந்த பின்னர் செங்கிஸ்கானுக் குத் தன் அன்புக்கனி மோசக்காரர்களால் களவாடின விப ரம் புரிந்தது. அவர்களோ புயல் வேகமாக மறைந்துவிட் டார்கள். செங்கிஸ்கான் தொடர்ந்து செல்வதும் முடியாத செயல், படை வீரர்களோ பெரும் பகுதி தாக்குதலுக்கு ஆளாகிவிட்டனர்...... இந்த நிலையிலே பூர்தை மோசக்காரர்கள் வசம் நெடுநாள் இருக்க விட்டு விடுவது பூர்தையின் உயிருக்கே முடிவுகூறும் காலம் வளர்த்துவதாகுமென அஞ்சி தோக்ரல் என்ற அவனின் நண்பனின் உதவியை நாடிப் பூர்தையைத் தேட முயற்சித்

தான். தோக்ரலிடம் ஏராளமான படை வீரர்களிருந்தனர். அவற்றிலே ஒரு பகுதியைச் செங்கிஸ்கானின் செயலுக்குத் துணை அனுப்பித் தந்தான்.

அன்றோர் நாள். மெர்கிட்ஸ் கூட்டத் தலைவனின் திருக்குமாரி யுலனுவை செங்கிஸ்கானின் தந்தை எசுகை கொள்ளை கொண்டு சென்ற அந்தச் சம்பவத்துக்கு பூர்தையை கடத்திச் சென்றதன் மூலமாக மெர்க்கிட்ஸ் பரம்பரை பழி வாங்கிவிட்டதாகக் கேலி பேசி மெர்க்கிட்ஸ் வீரர்கள் களித்திருந்தனர். செங்கிஸ்கானின் வீரம் சிதைவுற்றது என்பது மட்டுமல்ல; அவனின் இதயத்திலே காதல் கோலால் தீட்டப்பட்ட கண்கவர் சித்திரமான பூர்தையையும் கடத்தி வந்துவிட்ட காரணத்தால் இனி எந்த வகையில் முயன்றாலும் மெர்க்கிட்ஸ் பரம்பரையை—புர்ட்ஸ் கூட்டத்தின் செல்வாக்குப் பெற்ற யாராயிருந்தாலும் எதிர்க்க அஞ்சுவரென அகமகிழ்ந்து இன்பக் கனவிலே மிதந்தனர் மெர்க்கிட்ஸ்டுகள்.

அவர்களின் அந்த ஆசைக் கனவைத் தகர்ப்பதுபோல ...படை வரிசையை விரிவாக்கிக்கொண்டு செங்கிஸ்கான் மீண்டுமொரு புதிய படைக்கு அணிவகுத்து வைத்தான். அந்தப் படையின் துணையோடு மெர்க்கிட்ஸ் கூட்டத்தினர் தங்கியிருந்த கூடாரத்தை நோக்கி இரவு நேரத்திலே தாக்குதல் துவக்கி வைக்கப்பட்டது. செங்கிஸ்கானின் இத்தகைய ஆவேசத் தாக்குதலை அவர்கள் எதிர்பார்க்கவில்லை. எனவே, போரில் மெர்க்கிட்ஸ் கூட்டம் அடிபணிந்தது. வேலி போட்டுக் கட்டிக் காத்து வந்த பூர்தை செங்கிஸ்கானால் விடுவிக்கப்பட்டாள்.

அன்பு இதயமும்—இன்பச் சித்திரமும் காதல்கீதம் பாடிக்கொண்டு குதிரைமீதமர்ந்து புர்ட்ஸ் கூடாரத்தை நோக்கிப் பயணம் செய்தன. அவர்களைத் தொடர்ந்தே குதிரை வீரர்கள் வெற்றி கீதமிசைத்துச் சென்றனர்.

காதல் கீதமும் வெற்றி கீதமும் ஒன்றோடொன்று மோதிக்கொண்டு கதம்ப இசையாக உலவிக்கொண்டு பனிப்பாறைகளிலே மோதி இன்பமயமாகத் திரும்பவும் எதிரொலித்துக் கொண்டிருந்தது.

குதிரையிலமர்ந்து செங்கிஸ்கானின் வீர மார்பிலே சாய்ந்து இன்பமொழி பேசிச்சென்ற பூர்தையின் கண்களி லிருந்து கண்ணீர் வடிந்து வீரனின் உடலிலே சூடேற் றியது. அவளின் அந்த அழுகை அன்புக் கண்ணீரின் பெருக்கா என விளக்கங் கேட்டான், அவள் மேலும் கண்ணீர் வடித்துக்கொண்டே தலையசைத்து உதடுகளி லிருந்து வார்த்தையை ஒவ்வொன்ருக நழுவ விட்டுக் கொண்டிருந்தாள். அவள் உதடுகளிலிருந்து உதிர்ந்து கொண்டிருந்த வார்த்தை ஒவ்வொன்று மொரு வாள் வீச்சாகியது. செங்கிஸ்கானுக்கு மொத்தத்தில் பூர்தை பேசியது ஆயிரம் வாள்கொண்டு வீரனை வேதனையாக்குவ தாகியது!

மலரைக் கசக்கிவிட்டார்கள்!—அழுகையும் ஆத்திர மும் கலந்த இந்த வார்த்தையை வீசிவிட்டு செங்கிஸ் கானும் கண்ணீர் வடித்தான். அந்தக் கண்ணீர் பூர்தையின் கண்ணீரோடு கலந்து பனிப்பாதையிலே வெப்பத்தை வீசிக்கொண்டிருந்தது!

செங்கிஸ்கானுக்கென உரிமை யாக்கப்பட்டிருந்த பூர்தையை மெர்க்கிட்ஸ் கூட்டப் படைத்தலைவன், பூர்தை சிறை வைக்கப்பட்டிருந்த நேரத்திலே கற்பழித்து விட்டான்! அந்தத் துயரச் சேதியைத்தான் வேதனை உள்ளத்துக்கு விருந்தாகத் தந்தாள் பூர்தை. அவள் படைத் தலைவனின் பலாத்காரப் பசிக்கு ஆளாகிவிட்ட கதையைத்தான் குதிரைமீதமர்ந்து பயணம் செய்து கொண்டே, கண்ணீர்த் துளியைத் துணையழைத்து செங்கிஸ்கானிடம் கூறிவந்தாள்!

அடிவயிற்றிலிருந்து எழும்பிய விம்மலோடு, அவள் தவறிவிட்ட சூழ்நிலைக்குச் சமாதானம் கூறித் தன்னையும், அவளையும் தேற்ற முயற்சித்தாலும் அவனின் காதல் வாழ்வில் நீக்க முடியாத வடுக்கள் ஸ்திரம்பெற்று விட்டதை எண்ண எண்ண செங்கிஸ்கானின் உள்ளமே எரிமலையாகிக் குமுறிக்கொண்டிருந்தது! கனியை மாற்றான் கடித்துவிட்டதற்காக அந்தக் கனியை அவன் இழந்துவிட எண்ணமிடவில்லை. பூர்தை கனி மீண்டும் தன் வசம் சேர்ந்தாளே என்பதற்காகச் சோர்ந்துபோன செங்கிஸ் கானின் உள்ளத்திலும் மின்னல் விச்சுப்போல மகிழ்ச்சி மின்னிட்டு மறைந்து கொண்டுதானிருந்தது.

தனது வாழ்வில் நிகழ்ந்துவிட்ட அவமானகரமான வேதனைகளைக் கடுமையான போர்க்களத்தில் ஓயாது வாள் வீசிக்கொண்டிருப்பதன் மூலமாக மறந்துவிடும் முயற்சியிலே செங்கிஸ்கான் பல புதியபோர் அரங்குகளைத்தானே வலிய ஏற்படுத்தி வாழ்வின் கடைசிக் கோடிவரை போர் இலகுவிலே முடிந்திட சூழ்நிலையை உண்டாக்கி வைத்தான். தொடர்ந்து பல களங்களைக் கண்டுகொண்டு நாடு பலவற்றை வெற்றி மாலையின் பரிசோடு சேர்த்துப் பெற்றுக்கொண்டே தன் வீர விளையாட்டைச் செங்கிஸ் கான் விரிவாக்கிச் சென்றான். என்றாலும் இடையிடையே அவன் வாழ்விலே நடந்துவிட்ட 'கோர நிகழ்ச்சி' செயல் தன்மையற்றவனாக ஆக்கி வீரனை, வேதனைபுரி வாசியாக உலவச் செய்தது.

அவனது வேதனைத் துயரம் உள்ளத்தைத் தேய்த்து உடலையும் தேய்த்து வந்தது. கடுமையான போர் நடந்து கொண்டிருந்த நேரத்திலே செங்கிஸ்கான் படுத்த படுக்கையாகிவிட்டான். மரணம் எந்த விதத்திலும் இன்னும் இரண்டே நாளில் தன்னைத் தழுவி விடுமெனத் திட்டமாக முடிவு கட்டிவிட்டான். எனவே படையின் பிரதம தளபதியை அழைத்துப் போரைத்தொடர்ந்து நடத்தும்படியும், தான் இரண்டொரு நாளில் மறைந்துவிட்டால் அந்த

மாண்டுவிட்ட செய்தியை படைவீரர்களுக்கு அறிவித்தால் படை சரிய நேர்ந்திடுமென்ற காரணத்தால் வெற்றி கிட்டிய பின்னரே தனது மரணம் பற்றி அறிவிக்க வேண்டுமென்றும் கூறித் தனது இறுதிக் கட்டளையையும் கடைசி வணக்கத்தையும் கூறிவிட்டு செங்கிஸ்கான் விடைபெற்றுக் கொண்டான். அவன் தளபதிக்கு கட்டளையிட்ட அடுத்த நாளே தன்னோடு விளையாடிக் கொண்டிருந்த வேதனைக்கு ஏமாற்றத்தை அளித்துவிட்டு...... தனது சிறிய கூடாரத்திலே செங்கிஸ்கான் மாண்டு கிடந்தான்.

போர் நடந்தது தீரத்தோடு......வெற்றியின் முடிவில் தான் அந்த மரண ரகசியம் வெளியிடப்பட்டது! லட்சோப லட்சம் வீரமக்களின் கண்ணீர் அந்த இலட்சிய வீரனின் நினைவுப் பீடத்திலே காணிக்கை யாக்கப்பட்டது! சரித்திரம்—செங்கிஸ்கானின் வீரதீரத்துக்கு விரிந்து கொடுத்து, அந்த வீர விளையாட்டுகளையெல்லாம் தொகுத்து புது அத்தியாயமாக மலர்ந்தது! கி. பி. 1227ல் அவன்—மறைந்ததாக சரித்திரம் கூறுகிறது! ஆர்மீனியாவிலிருந்து கொரியா வரை—திபெத்திலிருந்து வால்காவரை செங்கிஸ்கானின் ஆட்சி பரவியிருந்ததாகச் சரித்திரம் பேசுகிறது.

சரித்திரத்திலே நம்பிக்கை வைக்க விரும்பாத புராணபுரி வாசிகள் செங்கிஸ்கானைப் போர்த் தேவன் என்றும், மங்கோலிய வமிசக் கடவுளென்றும் கதை கட்டி புதிய புராண ஏடுகளை மக்கள் முன் நீட்டத் துவங்கினர். அதைச் சரியென நம்பி செங்கிஸ்கானை கடவுளாக்கித் துதிபாடவும் சில கூட்டங்கள் அவ்வப்போது வாழ்த்தான் செய்தன. ஆனால் பரவிவரும் புத்தறிவு, புராணத்திரையை எடுத்துவிட்டு மறைக்கப்பட்டுக் கிடந்த சரித்திரத்தை மக்கள்முன் வைத்துத் துதிபாடிய செங்கிஸ்கானை மாஜி கடவுளாக்கிவிட்டு அவன் தீரத்தை எடுத்து இயம்பி உண்மை நிலையை விளக்கிடும் அற்புத பணியை

யாற்றி வருகிறது! அகில உலகப் புராணப் பித்தர்களுக்குப் புத்தறிவின் ஒளி பேரிடியாகியது. என்றாலும் அழிந்து கொண்டிருக்கிற புராண ஏடுகள் புத்தறிவால் மலர்ந்த சரித்திர ஏடுகளின் முன்னே போட்டியிடத்தான் பார்க்கின்றன - வீரனோடு விழி பழுதாகவும் கோழையுமான எத்தன் வாட்போருக்குப் போட்டியிட்டு அழைப்பது போல!

# எகிப்து

சிரிப்பிலே சொக்கவைத்து, அங்க அசைவிலே சிலையாக்கி, விழிவீச்சை வீசி, வாள் வீச்சுகளையெல்லாம் அடிபணியச் செய்துவந்த அழகி—கிளிமொழி கிளிய பாட்ராவை ஒரு காலத்திலே அரசியாகத் தாங்கியிருக் கிறது எழில்மிகு எகிப்து! நைல்நதி தென்றல் நடையிலே பாட, அழகு வாகனமேறி அகிலமெல்லாம் பவனிவந்து அரச பரம்பரையையே ஆட்டிப் படைத்திருக்கிருள் அந்த மாது சிரோன்மணி! பாராண்ட மன்னர்கள் அவளின் பாதமலரடியேயாயினும் முத்தமிடத் தயாரெனத் துடித் தனர்! கோபக்கனல் என்று பட்டம் பெற்றிட்ட வீர தீரர்களெல்லாம் கோமளவல்லியின் கடைக்கண் வீச் சுக்கு ஏங்கி நின்றதுண்டு! இரும்பு இதயம் படைத்தவர் எதற்கும் இலகுவிலே இளகிடாதவரென்று கூறப்பட் டவர்களெல்லாம் இன்மொழியாளின் இங்கிதமொழி கேட்டு இதயத்தைச் சுக்கு நூருக்கிக் கொள்ளக் காத் திருந்தனர். அவளின் உதட்டுத் துடிப்பிலே உள்ளம் உடைந்தோர் எத்தனை பேரோ? அந்த உதட்டசைவுமொழி உலகத்தையே என் காலடியில் கொணர்ந்து சேர் என ஆணையிட்டிருந்தாலும் அதை உடனடியாக முடித்துத்தர வீரர்கள் ஒன்றல்ல, இரண்டல்ல, லட்சோப லட்சமாகக் காத்து நின்றனர்.

இந்த அளவிலே கீர்த்தி கீதமிசைக்க உலாவிவந்து கொண்டிருந்தாள் அழகி கிளியபாட்ரா அன்ருேர் நாள் எகிப்திலே! அன்றைய எகிப்து அரசியின் அழகுக்குப் போட்டி போட்டதைப் போலத்தான் இன்றைய எகிப்தின்

வளத்துக்காக, அந்த வளத்தின் பலனை அனுபவித்துக் கொள்வதற்காக வல்லரசுகளுக்கு எத்தனையோ நாள் ஏக்கம்! துக்க கீதமிசைத்துப் பார்த்தன எத்தனையோ வல்லரசுகள். அழகி வாழ்ந்த நாடு. அவள் ஆண்டு அகிலத்தையே ஆட்டிப் படைத்த நாடு. அது இப்போது அவல நிலையிலே. இந்நிலை கூடாது. எனவே, உன் நாட்டைப் பொன்னுடாக்க நான் துணைவருகிறேனென எத்தனையோ வல்லரசுகள் இன்றும் போட்டி முனையிலே ஊஞ்சலாடுகின்றன. ஆதிக்க வாதிகளின் கொடுமைகள் பலவற்றிலிருந்து இப்போதுதான் சிறுகச் சிறுக விடுபட்டுக்கொண்டு வரும் எகிப்து இனி வளர்ந்து வருகிற புதிய பயத்தை எண்ணி ஏங்கத்தான் செய்கிறது.

சூதுத்திட்டத்தைச் சுந்தர மொழியிலே, ஆதிக்க தர்பாரிலே, வாணிப நாடகம் ஆகியவற்றுலெல்லாம் அகில உலகிலும் ஏமாந்த இடங்களிலெல்லாம் ஆங்கிலேயர் திறம்பட நடத்திவந்த நேரத்திலேதான் அதன் கழுகுப் பார்வையிலே எகிப்தும் பட்டு ஆண்டுத் தொடராகத் தொல்லையைச் சுவைத்துக்கொண்டிருந்தது.

ஆங்கில ஆதிபத்தியம் 1882-ம் ஆண்டே எகிப்திலே கால் வைத்துவிட்டது! அன்று அண்டனி என்ற ரோம் வீரன் நைல் தீரத்திலே முகாம் செய்துகொண்டு இழுத்துவா அந்த அகங்காரியை இந்த ரோமாபுரிச் சிங்கத்தின் பராக்கிரமத்தைக் காட்டுகிறேன் என்று வீரம் பேசி எகிப்தின் எழிலரசியை அழைத்தான்! ஆனால் அண்டனியின் முடியையே தன் காலடியில் போட்டுக்கொண்டாள் கிளியபாட்ரா தன் சாகசத்தால். நைல் நதியே அப்போது அண்டனியின் நிலை குறித்து சிரித்துப் பேசிக்கொண்டே சலசலத்து ஓடியது. இவையெல்லாம் அப்போது அந்த அழகி வாழ்ந்த நாளிலே. ஆனால் 1882-ல் ஆங்கில ஆதிபத்தியன் துப்பாக்கி வீரர்கள் நைல்நதி தீரத்தைக் கைப்பற்றி எகிப்து நோக்கி

முன்னேறியபோது எந்தக் கிளியோபாட்ராக்களும் வாழவுமில்லை-சாகசத்தால் சதிகாரனை வீழ்த்திடவுமில்லை. அப்போது நாடாண்டவர்கள் எகிப்தையே கட்டியாளத் திணறிக் கொண்டிருந்தபோது எதிரிகள் வேறு படையெடுத்து வந்தால் நாடு நாசக்காரர்களிடம் சிக்கிவிட வேண்டிய ஒரே வழிதான் எஞ்சியிருக்கும். அந்த நிலை தான் அன்று எகிப்திலே வட்டமிட்டது!

ஆட்சிப்பிடி ஆங்கிலேயனிடம் சிக்கிவிட்டதும் பல நாளாக எண்ணி ஏங்கித் தவித்துக்கொண்டிருந்த தனது ஆசைக் கனவுகளை நடைமுறையாக நடமாடவிட்டான். சுரண்டல் அகராதி விரிந்துகொண்டே சென்றது. சோலைச் சுந்தரி பாலைவன அழகி ஆகிக்கொண்டே வந்தாள்! எழில்மிகு எகிப்து எனப் போற்றித் திருஅகவலால் மகிழ்விக்கப்பட்ட நாடு எடுப்பார் கைப் பாவையாகி வந்தது! ஆண்ட இனம் அன்னியனால் ஆளப்பட்டது! வேடிக்கை பேசி வேந்தர் பலரை அடிமைகொண்ட பரம்பரை வேதனை தாங்கிகளாக உலவிக்கொண்டிருந்தனர். கட்டிய மனைவி கட்டத் துணியின்றி கவலையால் தேய்ந்துகொண்டிருந்த நேரத்திலே பட்டும் பட்டாடையும் கையுமாகத் தன் ஆசை நாயகியின் வீடு நோக்கிச் செல்லும் மோசக்காரனைப் போல ஆளும் போர்வையிலே ஆங்கில ஆதிபத்தியம் நுழைந்து கொண்டு எகிப்தியரைத் தொல்லைக் குகையிலே தள்ளிவிட்டு—அவர்களின் நாட்டு வளத்தையெல்லாம் சீமையிலேகொண்டு போய் சேர்த்தது!

காலத்தால் ஏமாற்றப் பட்ட எகிப்தியர் ஏமாறாத காலத்துக்கு ஏங்கி நின்றனர். அந்த நாளும் வந்தது. எகிப்தியரின் முதல் முழக்கம் கிளம்பியது! முதலாம் உலகப் பெரும் போர் நடந்து முடிந்ததற்குப் பிறகு எகிப்திய விடுதலை விரும்பிகள் அங்கே பெரிய அளவிலே வளர்ந்தனர். ஏமாற்றுப் பேச்சால் இனியும் தாம் ஏற்றங் கொண்டிட முடியாது என்ற நிலை ஆங்கில ஆட்சிக்கு ஏற்படவுமே சமாதான ஒப்பந்தத்திற்கு எகிப்தியரை அழைத்தனர்.

அந்த ஒப்பந்தம் 1936—ம் வருடம் ஏற்படுத்தப்பட்டது! அதன்படி எகிப்தின் நாட்டாட்சியிலே ஆங்கில ஆதிபத்தியத்தின் பிடி விடுபட்டிருப்பதாக அந்த ஒப்பந்த ஷரத்து பேசியது! ஆனால் எகிப்தின் பாதுகாப்புக்காக 1956ம் வருடம் வரை ஆங்கிலப் படைகள் எகிப்தின் எல்லைக் கோடுகளிலே நின்று கொண்டிருக்குமென்றும் அந்த ஒப்பந்தத்தின் ஷரத்து சாகச மொழி பேசியது!

நாடு நமதாகியும் அன்னியப் படை பவனி வருவதை ஜனநாயக உள்ளங் கொண்ட எகிப்தியர் சகிக்க முடியாதென நல்லாட்சி விரும்பிகள் போர்முழக்கம் செய்தனர். இரண்டாம் உலகப் பெரும் போரால் தேய்ந்துகொண்டிருந்த ஆங்கில ஆதிபத்தியத்துக்கு இது வேறு புதிய தொல்லை உதயமானது. ஓரளவுக்கு உரிமைக் குரலிசைப்போரைச் சமாதானப் படுத்துவதற்காக 1946-ம் வருடம் எகிப்திலிருந்த ஆங்கிலப் படைகள் அகற்றப்பட்டு—சூயஸ்கால்வாய் பகுதிகளிலே அந்த அகற்றப்பட்ட படைகள் முகாம் செய்துகொண்டன. எகிப்துக்கும் சற்று எட்ட இருந்தே தனது ஆசை வலையை ஆங்கில ஆதிபத்தியம் வீசிக்கொண்டிருந்தது—இந்த மாதிரியான முறையிலே!

நல்லாட்சியின் அருகிலே—நயவஞ்சகன் பாராக் கொடுத்துக்கொண்டிருப்பது—பெட்ரோலுக்குப் பக்கத்திலே தீ இருப்பதைப்போலத்தான் என்பதை நல்லாட்சி விரும்பிகள் எண்ண மறந்து போய்விடவில்லை! விரட்டியடிக்கப்பட்ட ஆங்கில ஆதிபத்தியம் எகிப்தியர் ஓய்ந்திருக்கும் வேளையிலே அங்கே மடமடவென்று குடிபுகுந்துவிடும்........., எகிப்தின் பக்கத்திலேயே அது முகாமிட்டுக் கொண்டிருந்தால்! இந்த உண்மை அறியப்பட வெகு நாளாகவில்லை எகிப்தியர்களால்! ஆனால் அந்த உண்மை எல்லோருடைய உள்ளங்களிலும் குடியேறி அது இதயகீதமாக மாறிடுவதற்குத்தான் சற்று தாமதமாகியது! இப்போது அந்த நிலையும் உரு

வாகிவிட்டது எகிப்தியர் இதயங்களிலே எவ்வளவோ பிரசாரத்துக்குப் பின்!

கடந்த சில நாளைக்கும் முன்னர்கூட...... கெய்ரோ நகரிலே நல்லாட்சி விரும்பிகளின் ஆர்ப்பாட்டம் நடந்து முடிந்தது. அமெரிக்க—ஆங்கிலத் தூதுவர்கள் தங்கியிருக்கும் மாளிகைகளுக்குள்ளேகூட ஆவேசங் கொண்ட மக்கள் நுழைய முனைந்திருக்கின்றனர். இந்த இவ்வளவு நிகழ்ச்சிகளும் அங்கே நடந்து முடிந்ததன் காரணம்—ஆங்கில—எகிப்திய ஒப்பந்தத்தை அது பழைய ஏற்பாடு என்ற காரணத்தால் ஒழித்துக் கட்டுவது; சூயஸ் கால்வாய் பகுதிகளிலே—ஆதிக்கமிடும் ஆங்கில ஆதிபத்தியத்தை விரட்டியடிக்க வேண்டுமென்பதற்காகத்தான். உலகமே புன்னகைபுரி நோக்கிப் பயணம் செய்வதற்கான வழி வகைகளைத் தேடிப் பிடித்துக்கொண்டிருக்கும் இந்த நேரத்திலே வாழ வளமிருந்தும் அது வஞ்சக நெஞ்சுள்ளோனுல் திட்டம்—ஷரத்து—ஒப்பந்தம் என்ற சாகச நடிப்பால் கொள்ளையிடப்பட்டு வருகிறதென்ருல் நேர்மை உள்ளங்கொண்ட யார்தான் இது மாதிரியான போக்குகளைச் சகித்துக்கொண்டிருக்க முடியும்? அது உலக அதிசயங்களிலே தனது நாட்டுப் பெயரையும் பதிவு செய்துகொண்டு நாகரிக நாடுகளின்முன் உலாவி வரும் எகிப்துபோன்ற நாட்டார் வஞ்சகத்தால் சிறைபிடிக்கப்பட்டிருப்பது ஜனநாயக அகராதியிலேயே அந்தச் செயலுக்குப் பீடம் அமையாது! ஆனுல், ஆங்கில ஆதிபத்தியம் சாகச மொழி பேசுகிறது. 1956-ம் வருடம் வரை எகிப்தின் பாதுகாப்பை முன்னிட்டுத் தனது படைகள்முன் ஒப்பந்தப்படி அங்கே இருந்து வருவதுதான் சரியென வாதிடுகிறது. இந்த வழக்குகள் ஐ. நா. சர்வதேச வழக்கு மன்றம் இங்கெல்லாம் புகுத்தப்படுமெனப் பயம்காட்டி வருகிறது வெள்ளை ஆதிபத்தியம்—ஈரான் விவகாரத்திலே நாடகமாடுகிறதே அதைப்போல!

ஈரானிலே எண்ணெய் ஆசை, வெள்ளை ஆதிபத்தி

யத்தை விடவில்லை. அதுபோலவே எகிப்திலே பெரு வாரியாகக் கிடைக்கும் வெண்பஞ்சு உலகினரால் White Gold என்ற அன்புப் பட்டத்தைப்பெற்ற அந்தப் பஞ்சு உற்பத்தி வெள்ளையர் ஆசையை எகிப்திலே திருப்பி விட்டுவிட்டது. 1947-ம் ஆண்டிலே மட்டும் 1254000 ஏகரா நிலங்களிலே பருத்தி பயிரிடப்பட்டிருக்கிறது எகிப்திலே. உலக பருத்தி உற்பத்தியிலேயே அதுவரை அவ்வளவு ஏகரா பயிர் செய்யப்படவில்லை. இப்போது ஆங்கில ஆதிபத்தியத்துக்கு எகிப்தின்மீது அடங்காத காதல் ஏற்பட்டிருப்பதன் சூழ்ச்சி மிகத் தெளிவாகப் புரியும். எகிப்தின் வளம் பெருகப்பெருக தனது ஆசைக் கனவையும் வளர்த்துக்கொண்டே செல்கிறது. பஞ்சாக வும் பருத்தியாகவும் அலெக்ஸாண்ட்ரியா மூலமாக 200000000 பவுன் விலை மதிப்புள்ள சரக்குகள் ஒவ்வொரு வருடமும் ஏற்றுமதியாகி யிருக்கின்றன. இவ்வளவு பெரிய வசதியுள்ள இடத்திலிருந்து வெளியேறிப் போகச் சொன்னால் ஆதிபத்தியத்துக்கு அது இலகுவிலே முடிந்து விடக்கூடிய காரியமா? ஆகவேதான் ஒப்பந்தம்—வழக்கு என்றெல்லாம் பேசி நாடகமாடி வருகிறது.

எகிப்தியர் எதையுந் தாங்கும் இதயத்தினராகவே இப்போது மாறியிருக்கின்றனர். சூயஸ்கால்வாய் பகுதி யிலே முகாமிட்டிருக்கும் ஆங்கிலத் துருப்புக்களால் தங்கள் நாட்டுக்கு எந்த முறையிலும் ஆபத்து உருவாக லாமென எண்ணித் தாக்குதல் நடந்தாலும் அதை எதிர்த்து நிற்கும் நிலையிலேயே இன்றைய எகிப்தியர் உலவுகின்றனர்.

எகிப்திய மந்திரிசபை—மக்கள் இதயகீதத்தை நடை முறை கீதமாக்கிடும் பணியினை ஏற்றிருப்பது உலகினர் பாராட்டுதலுக்குரியது. அங்கேயும் ஆங்கில ஆதிபத்தி யத்துக்குக் கைகாட்டிகளாக ஒரு சிலர் இருந்தாலும் அவர்கள் மிகப் பலராக இருக்கும் நல்லாட்சி விரும்பி களின் உரிமைக் குரலொலியால் அடக்கப்பட்டு வருகிறார்

கள். எகிப்திய பிரதமர் 72-வது வயதடைந்த முதியவர்; நாகாஸ் பாஷா என்ற பெயருடையவர். அந்தத் தூயவரின் ஓயாத உழைப்பால் எகிப்து பூம்பொழிலாகி வருகிறது! அவரோடு கூட்டுத் துணைபுரிந்து வருகின்றனர் மற்ற மந்திரிக் குழுவினர்! ஹூஸேன் பாசா என்ற அறிஞர் பிறவிக்குருடர் என்றாலும் அவர் கல்வி மந்திரியாகவிருந்து ஆட்சி நல்ல முறையிலே இயங்கிட ஒத்துழைக்கிறார்.

எகிப்தின் மன்னர் பரூக் (Farouk) சமீபத்திலே நாரிமனைத் திருமணம் செய்துகொண்டவர். கிளியோபாட்ராவின் அழகையும் மிஞ்சிவிட்ட அழகி நாரிமன். ஒரு சாதாரண பெண் மன்னரின் உள்ளத்தையே அழகுத் தூண்டில்போட்டு இழுத்துவிட்டாள். பல சிக்கலுக்கிடையே தனது வாழ்க்கைத் தோழியராக்கிக் கொண்டார் மன்னர். மன்னரைப் பொறுத்த அளவிலே தனி நிலையிலேயே உலவுகிறார். அரசியலிலே அவரது சிந்தனை பெரும்பகுதி ஈடுபடுவதில்லை. காரணம் மந்திரி சகல அலுவல்களையும் வெற்றியோடு முடித்து விடுவதால்!

எகிப்தின் மொத்த ஜனத்தொகை 20,000,000. இதிலே முக்கால் பகுதியினர் உழைப்பின் உருவங்கள். அவர்கள் மலேரியா, காசம்போன்ற கொடுநோயால் அடிக்கடி பாதிக்கப்படுகின்றனர். அந்த நோய் நிலையிலிருந்து மக்களை விடுவிப்பதற்காக எகிப்திய சர்க்கார் தீவிரமாகப் போராடி வருகிறது.

உலக அதிசயத்திலே இடம் பெற்றுவிட்ட பிரமிட்டையும் (Pyramid) ஸ்பிங்க்ஸையும் (Sphinx) வெகுவாகச் சிறப்பித்து எகிப்து அரசினர் இன்றளவும் கட்டிக் காத்து வருகின்றனர். கிறிஸ்து பிறப்பதற்கு நாலாயிரம் ஆண்டுகளுக்கும் முன்பிருந்தே பிரமிட்டும், ஸ்பிங்ஸும் நைல்நதி பள்ளத்தாக்கைக் கீழ்நோக்கி நின்றுகொண்டிருப்பதாகச் சரித்திர ஆசிரியர்கள் திட்டமாகக் கூறுகிறார்கள். என்ன கருத்துக்காக என்ன நிலையை முன்வைத்து

அந்த இரு அதிசயங்களும் பூர்வீக எகிப்தியர்களால் நிறுவப்பட்டது என்பதற்குச் சரியான விளக்கமில்லை யென்றாலும் நிலைத்து நிற்கும் நினைவுச் சின்னம் எகிப்தியர்களால் ஆனது, அது என்றும் அப்படியே இருந்திட வேண்டுமென்ற எண்ணத்திலேதான் அந்த மிகப் பிரமாண்டமான சின்னங்களை ஏற்படுத்தினர் என எண்ணுவதற்கும் இடமிருக்கிறது. கீஸோஹ (Gizeh) என்ற இடத்திலே சிங்கத்தின் சரீரமும் மனிதனுடைய முகமும் கொண்ட ஸ்பிங்க்ஸ் இருக்கிறது பிரமாண்டமான சிலை வடிவிலே! கே ஆப்ஸ் (Cheops) என்ற இடத்திலே பிரமிட் கோபுர மலை காட்சியளிக்கிறது. எகிப்திலே உள்ள மொத்த பிரமிட் கோபுரங்கள் 80-க்கும் அதிகமென மதிப்பிடப்படுகிறது.

இந்தப் பிரமிட்டுகளிலெல்லாம் மிகப் பெரியதெனக் குறிப்பிடப்படுவதை 3733, B. C. கிறிஸ்துவுக்குமுன் ஆண்டிலே எகிப்தியர் கட்டி முடித்திருக்கிறார்கள். அதன் இப்போதைய மொத்த உயரம்—150 அடி! இது போலவேதான் ஸ்பிங்ஸ் சிலையின் அடி அளவும் மிகப் பெரியது. ஸ்பிங்ஸின் நீளம் 240 அடி. உயரம் 66 அடி. அந்தச் சிலையின் முகம் 14 அடி. அதன் காதுகள் 4½ அடி. மூக்கு 6 அடி. வாய் 8 அடி இவ்வளவு பெரிய பயங்கரத் தோடுதான் ஸ்பிங்ஸ் இன்றும் நின்றுகொண்டிருக்கிறது. எகிப்து கிறிஸ்து சகாப்தத்துக்குமுன் ஆட்சி நடத்திய போது இருந்த சாம்ராஜ்யங்களிலே பெரும்பகுதி பாலைவனமாக இன்று காட்சியளித்துக் கொண்டிருக்கிறது. பாலைவனம் சாம்ராஜ்யத்தை மூடாததற்கு முன்பு கலையும் இலக்கியமும் அங்கே மிகப் பெரிய அளவிலே உலவியிருக்கிறது. ஆனால் அந்தக் கலையிலும் இலக்கியத்திலும் ஒரே குறை. அந்தக் கலையும் இலக்கியமும் இன்றைய எகிப்தியர் கண்ணுக்குப் படாமல் பாலைவனத்தால் மூடப்பட்டதுதான் சரியென்று படுகிறது. நமக்கெல்லாம் குருட்டுக் கொள்கைகளைக் கலையாக்கி அதை இலக்கியத்தொகுப்பிலே

வைத்துக் காட்டியது அப்போதைய எகிப்து. வாழ்வின் துவக்கத்திலிருந்து முடிவுவரை வேதாந்தமும் நாதன் திருவிளையாடல் மகிமையும் வட்டமிட்டுச் சுழன்று கொண்டேயிருந்தன. எவ்வளவுக்குக் கடவுள் தன்மை காட்டி மக்களை அழைக்க முடியுமோ அந்த அளவுக்கு அழைத்தன அப்போதைய கலையும்—இலக்கியமும்!

தப்பித்தவறி இப்போதும் அந்தப் பாலைப் பிரதேசங்களிலே அகப்படுகிற பழைய கல்வெட்டுகளிலே அந்தக் கலைகள் மிளிர்வதைக் காணலாம். 1799-ம் கி. பி. ஆண்டிலே நெப்போலியன் வீரர்கள் நைல்நதிப் பரப்பிலே கண்டெடுத்த சிலையிலிருந்த கல்வெட்டிலேகூட பழைய வேதாந்த விசாரந்தானிருந்தது. இன்றைய எகிப்திலே மாஜி கடவுளாக நின்றுகொண்டிருக்கும் அம்மன்-ரா (Ammon-Ra) போன்ற கடவுள்கள் பழையகால எகிப்தியரின் வாழ்விலே உலவி, அதை முன்வைத்துக் கொடுமைப் படுத்திய வேதாந்திகளின் செயலால், சரிந்த கதை ஏட்டிலே அடங்க முடியாதது! வேதாந்திகளின் வேத முழக்கம்தான் அப்போதைய கலை. அதை நாட்டு நிலையிலே உலவவிட்டு எகிப்திய இலக்கியச் சோலையென உலகுக்கு அறிமுகம் செய்தனர்.

நல்ல வேளையாக பாலைவனப் பரவலால் அந்தக் கலையும்—இலக்கியமும் ஓரளவு அழிந்தது. நமது கால எகிப்தியர்களில் ஒரு சிலருக்குக்கூட அதிலும் குறிப்பாக வேதாந்திகளுக்கு அந்தப் பழைய இலக்கியத்தை நடமாட விட எண்ணமும் இப்போது இருந்து வருகிறதாம்! அந்த எண்ணம் அரும்பும் நிலையிலேயே சிதையச்செய்து வரப்படுகிறது முற்போக்காளர்களின் தீவிர போராட்டத்தால்! தூர்ந்துபோன கோபுரங்களையும், சிதைந்திருக்கும் சிலைகளையும் காட்டி மக்களிடம் புரோகிதபுரி மாண்பினை விளக்கி மீண்டுமொரு புரோகித ஆட்சிக்கு நாட்டினை இழுத்துவிடும் நிலை மிக அல்லலான சம்பவமல்ல, அதற்கான நினைவுச் சின்னங்கள் எகிப்திலே

ஏராளம். என்ருலும் மேல்நாட்டு நடையுடை பாவனை யின் கடைசிக் கோடியில் எகிப்தியர் இன்று உலாவி வருவதாலும், முற்போக்காளர்களின் பிரசாரத்தாலும் வேதாந்திகள் கனவு அறுக்கப்பட்டு வருகிறது.

புத்துலகக் கல்வி இன்றைய எகிப்திலே ஆண்களிட மும் பெண்களிடமும் நல்ல முறையிலே பரவி வருகிறது சர்க்காரின் பெரு முயற்சியால். எனவே எந்த ஆணிட மும் பெண்ணிடமும் மோட்ச சாம்ராஜ்யத்தின் மாண் பினை எந்த வேதாந்தியும் இலகுவிலே விளக்கிக்காட்டிடக் கூட முடியாது. ஆண்களைவிட இன்றைய எகிப்தியர் ஒருபடியல்ல, பலப்படிகள் முன்னேறிவிட்டனர். பெண் கள் கழகத்தின் துணையினுலேயே இந்த முன்னேற்றங்களை அவர்கள் எட்டிப் பிடித்தனர். உரிமை முழக்கத்தை எழுப்பியதன் மூலமாக, பெண்களுக்கென ஒரு கழகமும் அவர்கள் விடுதலைபற்றிச் சிந்திக்க யாரும் இல்லாத நேரத்திலே எகிப்திய எழிலரசிகள் மிக மட்டமாகத்தான் நடத்தப்பட்டு வந்தனர். இந்த இழிநிலையை மாற்றுவ தற்காகத்தான் Bentel Nil Uuion என்ற கழகம் முன்னேற்ற உள்ளம்கொண்ட தோழியர்கள் சிலரால் முதலில் துவக்கப்பட்டது! மேடம் டோரியா சாபிக் என்ற தோழியர்தான் இப்போதைய அந்தக் கழகத்தின் தலைவி. அந்த அம்மையாரின் அறிவுத் தெளிவால் சொல்லொணு நன்மைகள் விளைந்திருக்கின்றன. பல அறப்போர்களைப் பெண் நலன் குறித்து நடத்தி அந்த அம்மையார் வெற்றியுங் கண்டிருக்கிருர்கள். ஒரு சமயம் கெய்ரோவிலுள்ள எகிப்து பார்லிமெண்டை நோக்கி ஆயிரக்கணக்கான தோழியர்கள் டோரியாவின் தலைமை யிலே அணிவகுத்துச்சென்று, பார்லிமெண்டின் வாயி லிலே நின்றுகொண்டு பெண்ணுரிமை சட்டத்திலே திட்டமாக்கப்படவேண்டும், அதை நடைமுறையிலும் அனுஷ்டிக்க வேண்டுமென முழக்கம் செய்தனர். அந்தத் தலைமைத் தோழியரை நோக்கித் துப்பாக்கி வீரன் சுடுவதாகப் பாவனைசெய்து கூட்டத்தைச் சிதறடிக்க

எண்ணினுன். ஆனல் துணிவோடு உனக்குத் தைரிய மிருந்தால் என்மீது குண்டைப் பாய்ச்சு என்று டோரியா முழக்கமிட்டார்கள். அந்தத் துணிவை எகிப்தியர் இன்றும் பாராட்டுகிருர்கள்.

தோழியர்களின் உரிமை முழக்கத்தால் எகிப்திய அரசியல் சட்டத்திலே 3-வது தலைப்பிலே Eqyptians- Both Men and Women are Equal under the Law என்ற சட்டத்தை ஏற்படுத்தினுர்கள். டோரியாவின் தலைமையிலே இயங்கும் கழகத்தின் சார்பாக 13 பள்ளிகள் ஏழைப் பெண்களுக்காக நடத்தி வருகிருர்கள் திறமையோடு—யுனெஸ்கோவின் ஒத்துழைப்பால்.

கெய்ரோவிலும் அலெக்ஸாண்ட்ரியாவிலுமுள்ள சர்வ கலாசாலைகளில் பெண்களுக்காக அதிக இடவசதி செய்து கொடுத்திருக்கிருர்கள். மெஹாலா என்ற இடத்திலே உள்ள பஞ்சாலைகளிலே தேர்ச்சிபெற்ற எஞ்சினியர்களாக எகிப்து நாட்டு எழிலரசிகள் உலவுகிருர்கள்! கெய்ரோ நகரிலே தற்பொழுது 20 தோழியர்கள் வக்கீல் தொழிலிலே பயின்று வருகிருர்கள். டாக்டர்களாகவும், விஞ்ஞானிகளாகவும் ஆகிடுவதற்கு அந்தந்தத் தொழிலிலே தோழியர்கள் முனைந்து பயின்று வருகிருர்கள்.

எனவே எகிப்தை வேதாந்த விசாரத்தாலோ அல்லது ஆதிபத்திய முறையாலோ இனியும் இலகுவிலே அடிமைப் படுத்திவிட முடியாது! அந்த நிகழ்ச்சியைத்தான் இன்று உலகினர்முன் எகிப்தியர் நடத்திக் காட்டி வருகின்றனர். புதுமைப் பாதையிலே வேகமாக அடியெடுத்து வைத்து நடந்து வருகிருர்கள்—ஒரு காலத்திலே பழமை பேசி குருட்டு வாழ்வு வாழ்ந்த எகிப்தியரின் செயலுக்கு பிராயச்சித்தமாக!

சூயஸ்கால்வாய் தகராறு விஷயமாக உலகத்

தொழிலாளத் தோழர்களே ஒன்று சேருங்கள் என்ற கோஷத்தைக் கிளப்பவும் தவறமாட்டோமென எகிப்தியர் இன்று முழங்கி வருகிறார்கள். ஆனால் ஆசைக் கனவை நனவாக்கிட முயன்றுவரும் ஆதிபத்தியம் ஏங்கி வருகிறது. எகிப்திலே தனது பிடியை மீண்டும் புகுத்துவதற்காக உரிமை முழக்கத்தின் முடிவை மறந்து இடிந்தும் பிளவும் பட்டுப்போன மாடிக்கு ஒடிந்த ஏணியின் துணைகொண்டு மேலேறிச் சொல்வோனைப் போல இடையே சரியவைத்துவிடும் ஆதிக்கப் பாதையிலே என்ற தெளிவிருந்தும் மேலும் மேலும் அந்த ஆபத்தான பாதையிலேயே ஆங்கில ஆதிபத்தியம் எகிப்தின் சூழ்நிலையிலே நயவஞ்சக நாடக மாடுகிறது — புதுமை புரியாளர்களுக்கெல்லாம் தமது செயலைக் கேலிக் கூத்தாகக்காட்டிக்கொண்டு!

# பாதகவிக்கும் பாரசீகம்

"நான் ஏதுமறியாப் பருவத்திலே இங்கு இருந்திட்ட போது கனிமொழி பேசி என் உற்றுர் உறவினரிடம், களவாடிச் சென்ருய், எனக்குரிமையாக வேண்டிய எந்தன் எழிலாசியை!............

நீ கோமான் என்பதற்காக உன் கோலாகலத்திலே எம்மவர் மயங்கியிருந்த நிலையை உன் சூதுத் திட்டத்துக்குப் பயன் படுத்திக் கொண்டு என் சுந்தரியைக் கொள்ளை கொண்டாய்! அவளை வளர்த்தேன் நான், வாலிபத்தின் வாயிலிலே நின்று கொண்டிருக்கிருளே, இன்று வசீகர ரூபவதியாகப் பார்ப்போர் உள்ளத்தைப் பரவசத்தால் வருடிவிடும் வனிதையாக—இந்த நிலையை அவளுடைய நான் என்ன பாடு பட்டிருப்பேன்! அதற்காக நான் செலவு செய்த நேரமும், பணமும் கொஞ்சமா? இப்பொழுது வந்து நீ உரிமை கொண்டாடுகிருயே அந்த உல்லாசி உனக்குடையவளென்று......என் நீ என்னைக் கேள்வி அம்பால் துளைக்க நினைக்கலாம்! என்ருலும் நான் கூறுகிறேன் பைத்தியக்காரா, கேள்! நாட்டிலிருக்கும் நாலாறு காட்சிகளைக் காணவேண்டி நடமாட விடப்பட்ட நாடோடி, நாளடைவிலே நாட்டையே தமதாக்கத் திட்டம் தீட்டியவனின் கதைபோல இருக்கிறது உன் செயல்!

இளமையும் எழிலும் பொங்கி வளர்ந்துவந்த என் இதய ராணியை இன்பவல்லியாக்கி விட்டிருக்கிறாய் என்பது உண்மைதான். நான் மட்டுமல்ல, உலகமே இதை ஒப்பத்தான் செய்யும்! ஆனால் அதற்காக, நான் வளர்த்தேன், வாழ வைத்தேன் என்ற ஒரே காரணத்தைக் காட்டிக் கொண்டு எனக்குரியவளை உன்னவளாக்கிக் கொள்வதை யாரும் அனுமதித்திட முடியாது!

வானிலே அங்கொன்றும் இங்கொன்றுமாக மின்னிடும் தாரகைகளால் முழு நிலவு ஒளி விடுகிறது என்று யாராவது கூறினால் எப்படியிருக்குமோ, அதுபோலத்தான் நீ பேசுவதுமிருக்கிறது—உன்னை நம்பித்தான் என் அழகுத் தெய்வம் வாழ வேண்டுமென்று, எண்ணுகிறாயே, அதைத்தான் குறிப்பிடுகிறேன் ஏதுமறியா ஏமாளியல்ல நான். குளிர் நிலவின் முகத்தழகியாக, குதூகலக் குமரியாக, புன்னகையும் முகமுமாக, உல்லாசமும் உள்ளமுமாக இதுவரை உன்னிடம் உலவிவந்தாளே எனக்குரியவள், அவளை இனியும் துயர கீதத்தின் இசைகூட செவியில் புகாத முறையில் வைத்துக் கொள்ள எனக்குத் தெரியும். அந்த நிலையை நான் அடைந்தான பிறகுதான் ......அதற்கான தகுதியும் திறமையும் என்னிடமுள்ளதை நான் கண்டறிந்த பின்னர்தான் என் உள்ளக் கருத்தை உன்னிடம் உரைத்திருக்கின்றேன். நேர்மையிலே நாட்டமும், உலகத்தின் பழிச்சொல் உன்னை வந்தடையக் கூடாதென்ற உயர் எண்ணமும் உனக்கிருந்தால் ஏன் இந்தமுழக்கம்? முடிவு முழக்கம் வரை வளர்ந்து செல்வதை இடையே தடுத்து விடுவதோடு, உனக்காகவும் எனக்காகவும் உலகத்துக்காகவும் நல்லது செய்தவனாக ஆவாய்!"

அழகு சுந்தரியை தான் அறியாப் பருவத்திலிருந்த போது, எவனோ எத்தன் கவர்ந்து செல்ல, காலமாற்றத்திலே தன் நிலை உணர்ந்து முழக்க மிட்டவனின் இதயக் குரல்தான் இங்குமேலே எடுத்துக் காட்டியிருப்பது. நமக்

கெல்லாம் அவன் முழக்கமிடுவது உண்மைதான். இந் நேரத்திலே நியாயமும் அதுதானென்று படுகிறது. அவன் கொடுக்கும் குரல் குவலயத்தினரைத் திரண்டு நின்று அவன்பக்கமாகச் சிந்தையைப் பதித்திடத்தான்செய்கிறது. ஆனால் இதையெல்லாம் தாண்டிச் சென்று நாம் பயணம் செய்தால்தான் உரிமை கொண்டாடுவோன் உள்ளத்தைத் துள்ளிதமாகப் பிரித்துப் பார்க்க முடியும். அந்த நிலைக்கு நாம் போகும்போதுதான் வேடிக்கை, வேதனை எல்லாமாகக் கலந்து நம்மைத் திக்குமுக்காட வைக்கிறது.

உரிமை, உரிமையென உலகதிரக் கத்தி—உல்லாசி எம்மவள் எனக் கூறினானே, அவனது எண்ணம் மாற்றானிடமிருந்து தனக்குரியவளை உரிமைபேசி வாங்கிக் கொண்டு வளர்த்து வாழவைத்தானே, அந்த மாற்றானின் இத்தனை கால செலவுத் தொகைக்காக சுந்தரியை மீண்டுமொருவனிடம் அடகு வைத்து அவன் தரும் பணத்தை முன்னர் வளர்த்தவனிடம் கொடுத்துவிட்டு, தன் போக்கிலே நடக்க வேண்டுமென்பதுதான்!

இதுதான் உரிமை பேசியவனின் உள்ளத்திலே மறைந்து கிடக்கும் இரகசியத் திட்டம். ஒருவனிடமிருந்து தனக்குரியவளை வாங்கி வேற்று ஒருவனிடம் ஒப்படைப்பதால் தனக்காக சில வெள்ளிக்காசுகள் அதிகமாகக் கிடைப்பதோடு நாலு நல்ல இடங்களிலே, தன்னை அறிமுகப் படுத்திவைப்பான் அந்தப் புதியவன், என்ற ஆசைக்கோட்டைக்குள்ளே, இன்று உரிமையை எழுப்புபவன் நுழைந்து கொண்டிருப்பதால்தான், தன் போக்கிலேயே நடந்து கொண்டிருக்கிறான்.

ஏதோ நல்லவன் போல நடித்து நாசநிலையை உலவவிட எண்ணிடும் அந்தப் பித்தனின் போக்கு நமக்குப் பரிதாபமாகத்தானிருக்கிறது. இன்முகவல்லி தன் இதய அரசன் வருவார், தன் அடிமை நிலை அகற்றுவார் என அகமகிழ்ந்து இருந்திருப்பாளே......அவள் கதிதான்

என்ன? ஒருவனிடமிருந்து மாற்ருனிடம் விலேபேசி—விற்கப்படும் மாட்டைப் போல—அந்த மாதரசி முன்னவனிடமிருந்து பின்ஞெருவனுக்கு விலேயாக்கப்படுவதை எப்படித்தான் சகித்திருப்பாள். கண்கள் குளமாகும். பொன்னுடல் மண்புழுவுக்கு இரையாகும் நாளே எண்ணிக்கொண்டிருக்கும். இது அவளது நிலே! விருந்து, வேடிக்கை, கோலாகலம் இப்படியாக இருப்பான் அவளுக்காக முன்பு உரிமை பேசியவன்!



காதலனுக நடித்தவன் கபடனுகிக் கள்வனின் கொடிய செயலேயும் மிஞ்சி, அழகுத் தெய்வம் என்று களிப்புச் சிந்துபாடிப் புகழ்ந்தவளேயே அகோர சிறைக்குள்ளே தள்ளிக் கதவு பூட்டப்படும் காட்சியைத்தான் மேலே பார்த்தோம். இந்த நிலே சாதாரணமாக உலவும்—சாமானியர்களின் தனி வாழ்க்கையில் மட்டும் ஏற்பட்டு விடும் சம்பவமல்ல! பலமைக் கொண்டுள்ள ஒரு நாடும், இத்தகு நிலேக்குச் சில சமயங்களிலே ஆளாகி விடுவதுமுண்டு. இந்தப் போக்கிலே வைத்துப் பார்க்கப்பட வேண்டிய நாடுதான் இன்றைய பாரசீகமும்!



அப்போது 1901-ம் ஆண்டிலே ஆங்கில ஏகாதிபத்யம் எங்கெங்கோ தனது ஆதிக்க ஆசையைப் பரப்பக் கனவு கண்டு கொண்டிருந்த காலம்! அந்நேரம் பார்த்து அதன் கழுகுப் பார்வையிலே பட்டது பாரசீகம்! பாரசீகப் பாவை எழிலும் சுவையும் தரும் சுந்தரியாகவே வெள்ளேயரின் பார்வையிலே பட்டுவிட்டாள், அப்போதே! தன்னிடம் ஒளிந்து கொண்டிருக்கும் சில அபாரத் திறமைகளேப் புரிந்து கொள்வதற்கு போதுமான புத்தித் தெளிவு பலரிடம் இருப்பதில்லே என்று இன்று நாம் உணருவதற்

கும் பல காலத்துக்கு முன்னரே ஏகாதிபத்தியம் உணர்ந்து வைத்திருந்தது. அந்த வகையிலே அதைப் போற்ற வேண்டியதுதான்! எண்ணெய் நிலம் பெருகிக் கிடக்கும் பாரசீகம், தன் நாட்டாரால் கவனிப்பாரற்று இந்த நிலையை வெள்ளை ஆதிபத்தியம் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டது! குப்பை மேட்டிலே கிடக்கிறது மாணிக்கம் தூசுபடிந்து. அதைத் துடைத்துத் திருத்திக் குபேர மாளிகையிலே வைத்தால் அதன் மாண்பு எத்தகையது என்பதை மாணிக்கத்தின் மாண்பை உணர்ந்தவனால்தான் அறிய முடியும்!

வெள்ளை ஆதிபத்தியத்தின் பிரதிநிதி வில்லியம் நாக்ஸ் என்ற பெயருடையவன் அப்போதைய பாரசீக மன்னரான—ஒரு ஆடம்பரப் பதுமையுடன், பாரசீகத்தின் நிலத்தில் எண்ணெய் எடுத்துக் கொள்வதற்காக ஆண்டொன்றுக்கு 40000 பவுன் கொடுத்துவிடுவதாக ஒப்பந்தமொன்று செய்து கொண்டான்! பாரசீகத்தின் வளம் 1601 லேயே வெள்ளையரால் கொள்ளையிடப்பட்டது. பாரசீகப்பாவை......பிரிட்டிஷ் கரங்களால் அடிமைப்படுத்தப்பட்டாள் அன்று. அந்த அடிமைத் தளையை மேலும் மேலும் அழுத்தியது. 1909-ம் ஆண்டு "ஆங்கிலோ—ஈரானி"யக் கம்பெனி என்ற பெயரிலே வெள்ளையர் சூதுத் திட்டம் உருவானது. பாரசீகத்தோடு 60 வருட ஒப்பந்தம் அன்றிலிருந்து செய்து கொண்டார்கள். 1914-லே பிரிட்டிஷ் பாராளுமன்றம் நேரடியாகத் தொடர்பு கொண்டு பாரசீகத்திலே தன் செல்வாக்கைப் பெருக்கியது. பின்னர் சில பூசலுக்குப் பின் மொத்த கம்பெனியின் லாபத்தில் 20 சதவிகிதத்தை ஈரான் சர்க்காருக்குக் கொடுப்பதாகக் கூறி தேன் மொழியிலே ஈரானியாரை மயங்கவைத்து, 1993 வரை எண்ணெய் எடுக்க பிரிட்டன் ஒப்பந்த மியற்றிக் கொண்டது.

இது பழைய கதையாகி விட்டது இப்போது! ஒப்பந்தமும் அதன் சார்புள்ள சரத்துக்களும் ஏட்டளவிலேயே

நிற்கும் படியாகிவிட்டன. ஏங்கித் தவித்த காலம் போதும்; ஏழையாகவும் கோழையாகவுமிருந்த நாள் மடிந்துவிடட்டும்; எம்மவரை ஏணியாகக் கொண்டு எத்தர் உல்லாச மாடி ஏறி இனியும் உலவுவதை நாம் காணச் சகியோம் என்று எழுச்சி முகத்தைத் துவக்கி வைத்து விட்டனர் பாரசீகக்காரர்கள்! ஆயிரமாயிரம் எண்ணெய்த் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். துப்பாக்கியையும், துணிவுமிக்க ராணுவ வீரர்களையும் ஆதிபத்தியத்தினர் தொடர்ந்து அனுப்புகின்றனர்......ஆனால் ஈரானியார் தங்களது இதயகீதத்தை—எங்கள் நாட்டுச் செல்வத்தைப் பொழுதெல்லாம் நீர் கொள்ளை கொண்டு போக, நாம் பார்திருப்போமோ என்று சிந்துபாடித் தங்களது தளராத உணர்ச்சியை அவர்களுக்குக் காட்டிக் கொண்டு தானிருக்கின்றனர்.

இன்றைய பாரசீகத்திலே சில குறுகிய காலத்திலே நடந்த குழப்பத்தால் ஆட்சி மன்றமே மாறுபட்டு, மக்கள் இதய கீதத்துக்கு ஒப்பிட்டாற்போலவே இன்ப வீணை எடுத்து மீட்டுகின்றனர். ஆட்சி மன்றத்தினரும், மக்கள் எடுத்துக் காட்டிடும் எழுச்சி முழக்கத்தை மிகப்பெரிய அளவிலே பிரிட்டிஷ் பாராளுமன்றம் வரை எட்டும்படி ஈரான் ஆட்சி செய்து விட்டது! எண்ணெய்த் தொழிலைத் தேசியமாக்க வேண்டுமென்ற மசோதாவை ஈரான் மன்னரும் மே மாதம் 2-தேதியே அங்கீகரித்துவிட்டார்.

மக்களுடைய எழுச்சிக்கு ஏற்றாற்போலவே இப்போதைய பாரசீக பாராளு மன்றத்தின் இந்தப் போக்குகளின் மறைந்த ரகசியம் என்ன என்பதை நாம் விளக்கிக் கொண்டால், அந்தப் பாராளுமன்றத்தின் உண்மை நிலையை நாம் புரிந்து கொண்டால் உரிமை பேசி உல்லாசியைத் தன்னவளாக்கிக் கொண்டு பின்வதொரு மாற்றானிடம் அடகுவைக்கப் பேரம் பேசுகிறானே, அந்த நிலையிலே பாரசீகம் உலவிடுவதற்காகத்தான் ஈரானிய மன்னரும் சரி, அவர் நம் பார்வையில் இயங்கிடும் அரச அவைக்

குழுவும் முழு வேகத்தோடு பணியாற்றுவதை அறிந்து கொள்ள முடியும்.

நமது இந்தக் கருத்து சிலருக்கு சந்தேகத்தை கிளப்பலாம். பார், பார் ஏதோ சூது மொழியால் பாரசீகப் புரட்சி நிலையை மறைத்துத் திரித்து விடுகிறான் என்று ஆத்திரத்தைக் காட்டலாம் நம்மீது. ஆனால் பாரசீக நிலைமையை நம்முன் எடுத்து வைத்துக் கொண்டு நேர்மை உள்ளத்தோடு ஆராய்ந்தால் அங்கே நடக்கும் மாய ஜாலங்கள் மிக இலகுவிலே புரிந்துவிடக்கூடும்.

பாரசீகத்தின் தென் பகுதியிலுள்ள அபடான் (Abadan) என்ற பிரதேசத்திலும் அதைச் சுற்றிலுமுள்ள இடங்களில்தான் எண்ணெய் வயல்கள் அதிகமுள்ளன. 80000 தொழிலாளத் தோழர்கள் வரை அந்த வயல்களிலே பணியாற்றுகின்றனர்.

மலேரியா போன்ற கடுமையான வியாதிகளுக்கு அந்த அத்தனை தொழிலாளர்களும் ஆட்பட்டுக் கொண்டு தானிருக்கின்றனர். போதுமான மருத்துவர்களின் துணையோ, விடுதியோ இவர்களுக்குக் கிடைப்பதில்லை! தொத்து நோயும் வேதனையும் அவர்களுக்கு பரம்பரைச் சொத்தாகி வந்தது. எல்லாத் தொழிலாளருக்குமாகச் சேர்த்து மொத்தமுள்ள குழந்தைகள் 2,44315 இரண்டரை இலட்சத்தை எட்டிப்பிடிக்கும் குழந்தைகள் அங்கே உலவியும் ஒரு பள்ளிக்கூடமாவது அவர்களுக்கு என்று பாரசீகத்தாராலேயோ அவர் தம் செல்வத்தைக் கொண்டு செல்லும் ஆங்கில ஆட்சியினாலேயோ கட்டித்தரவில்லை. மிகமிக வெட்ககரமான செய்கை! பணமில்லை எங்களிடமென்று கைவிரித்தது பாரசீகம். ஆனால், அந்நாட்டு எண்ணெயால் வருவாய்வந்த பணமெல்லாம் லண்டனிலே மூழ்கியது. ஈரானிய இம்பீரியல் பாங்கின் தலைமை அலுவலகங்கூட லண்டனிலே இருந்துதான் இயங்கியது. இங்கிலாந்து நாட்டார் என்ன பித்தர்களா பாங்கியின்

தலைமை நிலையத்தை ஈரானிலேயே வைத்துக்கொள்ள! ஈரான் வளம் எண்ணெயாக வளர்ந்து......பணமாக மாறி சீமைச் சிறையிலே அடைபட்டது!

மக்களின் உள்ளம் எரிமலையைப் போன்றது என்பது எவனோ எழுதி வைத்த கற்பனைக் கதையல்ல என்பதை, ஈரானியத் தொழிலாளர்கள் நடைமுறையிலே காட்டத் துவக்கினர். நோயால் தேய்ந்து, பசியால் உலர்ந்து, சாகாத வாழ்வு வாழ்ந்துகொண்டிருக்கும் எண்ணெய்த் தொழிலாளர்கள் நாட்டு வளமும் தங்கள் தொழிலின் பயனும் மாற்றானுக்கு நம்மைத் தொல்லை நிலையிலேயே விட்டுக்கொண்டு சிரித்துப்பேசும் சீமைச் சீமானுக்குப் போகிறதென்பதை மிகமிக விளக்கமாகப் புரிந்து அந்த நிலை—சீமான் நம்மீது குதிரை ஏறுவதை நிறுத்தினால்—மாறினால் நாம் வாழமுடியும் மக்களாக மந்தநிலையி லிருந்து விடுபட்டு என்ற முடிவுக்கு வந்தனர்.

எழுச்சி உள்ளங்களின் முடிவு எதுகுலகாம்போதி பாடி எக்கச்சக்கமான நிலை ஏற்பட்டதும் எழுந்து ஓடுகிறானே அவனைப் போன்றதல்ல! எதையுந்தாங்க இந்த இதயமுண்டு என்ற போர்ப்பாட்டிலேயே தனக் குரிய பாதை அமைத்துச்செல்கிறான். இத்தகு பாதை யிலேதான் எண்ணெய்த் தொழிலாளர்கள் பவனி வந்தனர். எண்ணெய் வயலெல்லாம் வேலை நிறுத்தம். எந்தெந்த விதமாகவோ அடக்குமுறை உருவானது. எப்படியும் அடக்கியே தீருவோமென காலத்தால் ஏற்றங் கொண்டோர் கர்ஜித்தனர்.

அப்போது ரஜ்மாரா பிரதமராக இருந்தார் பாரசீ கத்துக்கு. பாரசீகக் குழந்தையின் பச்சை ரத்தம் ஆங்கில நாட்டுக் குள்ளநரிக்கு விருந்தாகி வருவதை ரஜ்மாராவும் அறிந்துதானிருந்தாரென்றாலும், இதற் கெல்லாம் முடிவு காணக் காலம் வருமெனக் காத்திருந் தார். டாக்டர் முஸாதிக் என்ற ஒருவர் எண்ணெய்த்

--தொழிலின் தேசீயத்தை விளக்கி மிகத் தீவிரமாகப் பிரசாரம் செய்ய ஆரம்பித்தார். புரட்சி காணத் துடிதுடித்து நின்ற தொழிலாளர்கள் அவர் பக்கம் திரண்டு நின்றனர் அவரின் ஆவேசப் பேச்சைக்கேட்டு! ரஜ்மாராவுக்கு முஸாதிக்கைப்பற்றி நன்ருகத் தெரியும். முஸாதிக்கின் அந்தரங்க ஆசையையும் அவர் புரிந்துதான் வைத்திருந்தார். அந்தக் காரணத்திஞலேயே தேசீய மாக்குதல் என்ற பிரச்னை தவருன வழிகாட்டியால் ஆவேசமாகப் பிரசாரம் செய்யப்பட்டு அரும்புவிட்டு வளர்ந்து வந்ததால் அந்தப் பிரச்னையை சில நாளைக்கு ஒத்திப்போட எண்ணிஞர். முஸாதிக்கின் போக்கை ரஜ்மாரா ஒப்பவில்லை. இந்த நிலைமையைச் சாதக மாக்கிக் கொண்டு முஸாதிக் கோஷ்டியார் ரஜ்மாராமீது துவே ஷத்தை வளர்த்தனர். அந்தத் துவேஷம் அவரை துப்பாக் கியால் சுடும் அளவுக்கு வளர்ந்தது.

இந்தக் குழப்பத்துக்குப்பின் துப்பாக்கி ஏந்திச் சுடும் அளவுக்குத் துணிந்துவிட்ட "பாடா" "இயன் இஸ்லாம்" இயக்கத்தினர் வேகமாக வளர்ந்தனர். தொழிலாளர் களும் தவருன இவர்களின் போக்கை உண்மை வழியென நம்பி அதன்படியே நடந்தனர். இந்த வேஷத்தை விளக்கிக் காட்ட முயன்ற ஒரு சிலரும் சுட்டு வீழ்த்தப் பட்டனர். அவர்களிலே டாக்டர் ஜங்கானே என்ற மந்திரியும் ஒருவர்

சுட்டனர்! சுட்டனர். பாரசீக ஆட்சி பீடத்திலே யாரும் அமர அஞ்சும் வரையிலே சுட்டு வீழ்த்தினர் நல்லறிஞர்களை! இந்த ஆர்ப்பாட்ட இயக்கத்தைமுன் நின்று நடத்திய முஸாதிக்கே நாளடைவிலே பிரதமராக அமர்ந்தார். பாரசீகப் பாராளுமன்றம் சட்டமியற்றி யது. எண்ணெய்த் தொழில் எங்கள் உடமை, அதை தேசியமாக்கப் போகிருேமென்று பிரிட்டனுக்கு அறிவித் தது. பிரிட்டன் குமுறிய உள்ளத்தோடு துடித்துக்

கொண்டே யுத்தக் கப்பல்களை பாரசீகம் நோக்கி அனுப்புகிறது.

இந்த இவ்வளவும் சில மாதங்களுக்குள்ளாகவே நடந்து முடிந்த காட்சிகள். எண்ணெய்த் தொழிலாளர் பூரித்து நிற்கின்றனர். இனி நம் வாழ்வு வளமாகும், பூஞ்சோலையிலே உலவிடும் புள்ளிமான்களாவோமென இன்பநாதம் இசைக்கின்றனர். உண்மை புரியாததால் உண்மை நிலையை பாரசீகத்திலே எடுத்துக்கூற துப்பாக்கி முனையிலே தடை! "ட்யூடே" (Tuden) என்ற பெயரிலே அங்கே இயங்கிடும் கம்யூனிஸ்ட் கட்சி சட்ட விரோத மாக்கப்பட்டிருக்கிறது. இந்த இயக்கத்தினர் தலைமறைவாகவே இருந்துகொண்டே அங்குமிங்குமாக அலைந்து தேசீயத் தன்மையின் பித்தலாட்டத்தை விளக்கி வருகின்றனர்.

ட்யூடே இயக்கத்தினர் எண்ணெய்த் தொழிலாளர் நலத்திலே கவலை செலுத்தி வருவது இன்று நேற்றல்ல, 1946-ம் ஆண்டிலேயே ஆங்கிலோ ஈரானிய எண்ணெய்க் கம்பெனியிலே உழைப்பவர் உரிமைக்காகப் போராடும் முகத்தான், மூன்று வாரங்கள் வேலை நிறுத்தம் நடத்தியிருக்கின்றனர். இன்றைய முஸாதிக் அன்று அமெரிக்க ஆதிபத்தியத்தின் செல்லப் பிள்ளையாக திரிந்தபோது ஈரானியர் நிலையிலே கவலை கொண்டவர்கள் ட்யூடே இயக்கத்தினர். இவர்களெல்லாம் இன்று மக்கள்முன் உண்மையை எடுத்துச் சொல்லத் தடை விதிக்கப்பட்டிருக்கின்றனர். இந்த நிலையிலே முஸாதிக்கின வஞ்சக திட்டம் வேகமாக உருவாகிறது. மக்களோ, தேசியம் என்ற மயக்கத்திலே இருக்கின்றனர்.

தேசீயத் தகராறை ஈரானிலே எக்கச்சக்கமாக்கி பிரிட்டனை அங்கிருந்து இந்த முறையிலாவது விரட்டி விட்டு, ஈரான் எண்ணெய் வயல் முழுவதிலும் தனது ஆதிக்கத்தைப் பரப்ப வேண்டுமென்பதுதான் அமெரிக்கா

வின் ஆசை. பிரிட்டன் வசம் இந்த எண்ணெய் வயல் சிக்கியிருப்பதால்தான் ஹாங்காங் வழியாக முன்னரொரு சமயம் செஞ்சீனவுக்கு கொள்ளை லாபத்துக்கு எண்ணெயைப் பிரிட்டன் விற்க நேர்ந்தது. பிரிட்டனை வயலிலிருந்து விரட்டியடித்தால் அங்கே நமது ஏகபோக ஆட்சிதானென கனவு காண்கிறது அமெரிக்கா. மேலும் ருஷிய பயம், அஜர் பைஜான் அச்சம், எல்லாமாகச் சேர்ந்து உடனடியாக எண்ணெய் வயலை விழுங்க வேண்டுமென்ற ஆவலை அமெரிக்கா தன் உள்ளத்திலே வளரவிட்டிருக்கிறது.

ஈரானில் தேசீயநிலை உச்சநிலை யடைந்ததும் பிரிட்டன் தனக்குரிய நஷ்ட ஈட்டை வேண்டும்! அப்போது நஷ்ட ஈட்டைத் தாம் கொடுப்பதாகக்கூறி எண்ணெய் வயலைத் தன் வசம் அடகு வாங்கி தமக்கே உரிமையாக்கிக் கொள்வது. இதுதான் அமெரிக்கா போட்டுள்ள திட்டம். இந்தத் திட்டத்தை நோக்கித் தான் இன்றைய ஈரான் கிளர்ச்சி பயணம் நடத்துகிறது. மக்களும், தொழிலாளர்களும் விழிப்புற்று இருந்தால் இனியும் ஒரு கடும் புரட்சி நடத்தி இன்றைய ஆட்சியிலிருந்துகொண்டு அமெரிக்காவுக்கு அடகு வைக்கும் நப்பாசையினரையும் அமெரிக்க ஆதிபத்தியத்தினரையும் அவர்களது போக்கிலிருந்து திருப்பிவிட முடியும்.

அமெரிக்க ஆதிபத்தியம் போட்டுள்ள திட்டம் எந்த விதத்திலும் வெற்றியடையாமலிருக்கவேண்டுமானல், தொழிலாளர்களின் புதிய புரட்சியால்தான் முடியும்! இன்றைய பாரசீகப் பிரதமர் முஸாதிக்குக்கூட வருங்காலநிலை கலக்கத்தைத்தான் தந்திருக்கிறது. அவர் ஆட்சி பீடத்துக்கு வந்த இந்தக் குறுகிய காலத்துக்குள்ளேயே மூன்றுமுறை மூர்ச்சையாகி யிருக்கிறார். இந்த நிலை ஒன்றே போதுமானது அவரது உள்ளத்தை நமக்கெல்லாம் எடுத்துக் காட்ட! அவர் கண்முன்னே எந்த நேரமும் நிழலாடிக் கொண்டிருக்கிற காட்சி.—

அது அமெரிக்காவால் சித்திரிக்கப்பட்டது. அதைத் தன் மனக்கண் முன்னே எண்ணிப் பார்க்கிறார்! முஸாதிக் பயந்து விடுகிறார். மீண்டும் எண்ணுகிறார் மூர்ச்சையாகிறார்—இது இன்றைய முஸாதிக் நிலை! இந்த நிலையிலிருந்து அவர் விடுபடுவாரா இல்லையா என்பதல்ல நம் கேள்வி. பாரசீக மக்கள் உண்மையறிந்து புதிய புரட்சிக்குத் தயாராவார்களா என்பதுதான் நம்மவர் உள்ளத்திலே உந்திக் குதிக்கும் ஆர்வ அலை!

# தாய்லாந்து

ஆட்சி, ஆதிக்கவாதிகளிடம் சிக்கியிருந்தால் நாட்டுப் போக்கிலே வேதனை விரிந்துகொண்டுதான் போகும்! ஆளுகிற வர்க்கம், ஆளப்படுகிற வர்க்கத்தின் மீது ஆதிக்கம் புரிந்து வருவது, ஆரம்பத்திலே ஆனந்தத்தைத் தந்தாலும் இறுதியிலே ஆபத்தைத்தான் அவர்களுக்குத் தேடித்தந்திருக்கிறது. உணர்ச்சியற்ற மரக்கட்டை என்று கேலிபேசப்பட்டவன் கூட உருக்கு உள்ளங்கொண்டு உரிமை முழக்கம் கிளப்புவோனாக மாறிடுவதுண்டு கால வளர்ச்சியால்! அடக்குமுறையை வழிவழி முறையாகத் தாங்கிக்கொண்டே வருபவன் யாரும் இலகுவிலே அடக்கிவிட முடியாது. அளவிலே அடங்காப் பிடாரியாகிவிடுவதுமுண்டு! நிலைமை இப்படி மாறுங் காலத்தில் கால்வைக்கும்போது அயலான் உழைப்பிலே தங்கள் இன்ப வாழ்க்கையை அமைத்துக் கொண்டவர்கள் அல்லல் படுவது இயல்பே!



தாய்லாந்து வரலாற்றிலே அல்லல்படும் கட்டம் இப்போதுதான் பெரிய அளவிலே வளர்ந்துவிட்டிருக்கிறது! ஆட்சிப் பிரதமர்—அவர்—ஆர்ப்பரிப்பின் பிரதிநிதி! அவரே கடத்திச் செல்லப்பட்டிருக்கிறார். தனது மாளிகையிலேயோ அல்லது அவரின் உல்லாச விடுதியிலேயோ தனித்திருக்கும்போது அல்ல! பொன்னையும், பொருளையும் கவர்ந்து செல்லும் நோக்கத்தோடு கடத்திச்

சென்றவர்கள் இருந்திருந்தால் காரியத்தை இலகுவாக்கிக் கொள்வதோடு தங்கள் கொள்கையினையும் வெற்றியடையும்படி செய்திருப்பார்கள். நிலைமை அப்படிப்பட்டதல்ல! ஆயிரமாயிரமாக மக்கள் கூட்டம், அதிலும் குறிப்பாக ராணுவத்தினர் நீட்டிய துப்பாக்கியோடு பெரும் பகுதி! இவ்வளவு ஆதிக்க அணைப்பு இருந்துந்தான் ஆட்சிப் பிரதமர் தூக்கிச் செல்லப்பட்டிருக்கிருர். தூக்கிச் சென்றவர்களும் யாரோ போக்கிட மற்றதுகளல்ல. ஆட்சியை பாதுகாத்துத்தீர வேண்டிய மிக முக்கியமான பதவிகளிலே உள்ளவர்கள்.

கடற்படையினர்! ஆமாம்; எந்தப் பிரதமர் சற்று நேரத்துக்கு முன் களிப்பு வழிந்தோட கடற்படையினரைப் பார்த்து ராணுவ மரியாதை செய்தனரோ அவரே தான்—அதே கடற்படை வீரர்களால் தூக்கிச் செல்லப்பட்டார். அங்கு ஏகாதிபத்தியத்தைப் பரவவிடலாமென மோப்பம் பிடித்துக் கொண்டிருக்கும் அமெரிக்கா மன்ஹாட்டன் என்ற கப்பலை தாய்லந்து சர்க்காருக்கு வழங்குவதாயிருந்தது. அந்த சம்பவத்துக்குத்தான் தாய்லந்து சர்க்கார் ஒரு பெரிய விழாவையே அன்று ஏற்படுத்தியது! விழா சிறப்பாக நடந்து கொண்டிருந்தது. அமெரிக்க ஸ்தானிகர் கப்பலை ஆட்சிப் பிரதமரிடம் ஒப்படைப்பதாக விழாவிலே அறிவித்தார்; தாய்லந்து பிரதமர் அந்த அழைப்பை ஏற்று கப்பலிலே கால்வைத்தார். பீரங்கிகள் முழங்கின! துப்பாக்கிகள் வெடித்தன! அந்த விழா நிகழ்ச்சியை சிறப்புப் படுத்துவதற்காக அல்ல! கப்பலிலே கால் வைத்த ஆட்சிப் பிரதமரை நோக்கித்தான் அவ்வளவு ஆர்ப்பாட்டமும், குண்டு முழக்கத்துக்கிடையே படைவீரர்கள் பிரதமரை தூக்கிச் சென்றுவிட்டனர். பிறகு எவ்வளவு எவ்வளவோ நிகழ்ச்சிகள் தாயலாந்திலே நடந்து முடிந்ததற்குப்பின் பிரதமர் நாடு திரும்பினுர். புகைந்து கொண்டிருக்கும் புரட்சியை அடக்குவதற்கும்

எவ்வளவோ திறமை தேவைப் படுகிற அளவிலே இப்போதைய தாய்லாந்து ஆட்சி இயங்குகிறது.



தாய்லாந்தின் இப்போதைய மன்னர் பூமிபோன் (Bhumiphon) இப்போதைய மன்னரின் சோதரரும், முன்னாள் மன்னருமான ஆனந்தா மாகிடோல் (Ananoa Mahidol) ஒரு நாள் இரவு தனது மாளிகைக்கு தூங்கச் சென்றவர்தான். திரும்பவேயில்லை! படுக்கையறையிலே மன்னர் துப்பாக்கியால் சுடப்பட்டு மாண்டு கிடந்தார்! ஆட்சிக் கோணலுக்கு மன்னர் முதல் பலியானார். அன்று ஏற்பட்ட கோணல் அவரின் தம்பி ஆளும் இக்காலத்தில் கூட நேர்படவில்லை என்பதோடு குழப்பமும் கலகமும் பெரிய அளவிலே அங்கு, என்பது குறிப்பிடத் தக்கது. இறுதிவரை மன்னனைத் துப்பாக்கிக்குப் பலியாக்கியவனைப் பிடிக்கவேயில்லை. வருடக் கணக்காக விசாரணை நடந்ததுதான் கண்ட பலன். எப்படியும் ஆட்சி நடக்கவேண்டுமே? பேருக்காவது மன்னர் என்ற பட்டத்தை சுமத்தி இறந்து பட்டவரின் தம்பியும் வாலிபப் பருவத்தின் பக்குவங்கூட அடையாத பூமிபோனை தாய்லாந்தின் அரசராக்கினர்.

ஆனந்தா மாகிடோல் வாழ்ந்து மறைந்த காலத்திலே உரிமை முழக்கம் எழுப்பவோ அந்தப் பணியை முன்னின்று நடத்தவோ ஆள்பலம் அவ்வளவாக அரும்பவிடவில்லை என்பது உண்மை. ஆனால் அவரின் அருமைத் தம்பி ஆட்சியைத் துவங்கிய காலமோ அதற்கு மாறுனது! "தாய்" (Thai) என்ற சொல்லுக்கு அந்நாட்டவர் மொழிப்படி 'சுதந்திரமுள்ள' என்று அர்த்தமாம். அந்தச் சொல் அளவிலே உள்ள சுதந்தரத்தை தங்களவர் வாழ்க்கைப் பாதையிலும் சுவைத்திட தாய்லாந்து நாட்டார் துடித்து நிற்கும் காலம் வளர்ந்தது வேகவேகமாக, பூமிபோன் ஆளுகையிலே!

# தாய்லாந்து

இரண்டாம் உலகப் பெரும்போர் நடந்து முடிந்தது! ஏகாதிபத்திய மெழுகுக் கோட்டைகள் புரட்சித் தீயால் சரிந்து கொண்டிருந்தன. அன்று உலகெங்கும் வளர்ந்த அந்த உரிமை முழக்கம் தாய்லாந்திலும் வளராமல் போய் விடவில்லை! குடியரசு என்று விளம்பரப் படுத்தப்பட்ட நாடுகளிலேயே குழப்பமும் சதியுமாக இருக்கும்போது... ......பெயரளவிலே ஒரு மன்னர், அவரைப் பயன்படுத்திக் கொண்டு தன் ஆசைக்கயிற்றால் ஆட்சியை ஆட்டிவிடும் பிரதமர்......இப்படியாக நாடு இருக்கக் கண்டால் விடுதலை வேட்கையினர் நிலைமை இப்படி இருந்து வருவதை சகிக்க முடியுமா? ஒன்று. பலவாகத் திரண்டு புரட்சி வளர்ந்தது! அவர்களின் நாட்டுச் செல்வங்கள் அமெரிக்கா போன்ற ஆதிக்க வாதிகளிடம் ஓடோடிச் சென்றன! அதற்கான வழிமுறைகளை தாய்லாந்து ஆட்சியினர் வகுத்துக் கொடுத்துக்கொண்டு தானிருந்தனர். ரப்பர் ஏற்றுமதியை தாய்லாந்திலிருந்து பெருக்கி அமெரிக்கா தன்வசம் ரப்பரை முடக்க ஆரம்பித்தது! தாய்லாந்தின முக்கிய தொழில் ரப்பர்தான். அந்தத் தொழிலிலே அமெரிக்கா கை வைத்தது. சுரண்டல் முறை ஆரம்பத்திலிருந்தே திட்டமிட்டு நடத்தப்பட்டு வந்தது. தாயலாந்தின் ரப்பர் தொழில் அமெரிக்க டாலரைப் பெருக்கியது! ரப்பர் தொழிலாளத் தோழர்கள் மலேரியாவாலும், காசநோயாலும் பரதவித்தனர். நாட்டாட்சியை நடத்துபவர்களே இந்நிலையைக் கண்டும் காணாதது போல நடித்தனர்.

ஆனால், நாட்டிலே இருள் கவ்வி வருவதை விரட்டியடிக்க நல்லறிஞர்கள் போர் முழக்கம் எழுப்பினர். தொல்லை சுவைத்தவர்கள் அணிவகுத்தனர் போர்ப்படையிலே! அந்த அணிவகுப்பு அச்சத்தைத் தந்தது ஆட்சியாளருக்கு! சரசி சதிராடி தன் சூதுத் திட்டத்தை முடித்துக் கொள்ள சுந்தரனை நாடும்போது அவனிடம் அந்த சரச சர்க்காரியின் போக்கையும், எண்ணத்தையும் யாராவது

கூறினல் ஆதாரத்தோடு......என்ன நிலை சதிராடிய சாகசகாரிக்கு ஏற்படுமோ......அது ஏற்பட்டுவிடும் என்பதை ஆட்சிப்பீடமேறியோர் மிக மிகத்தெளிவாக உணர்ந்து விட்டனர். அந்த நிலைதான் அவர்கள் போர் முழக்கம் செய்து அணிவகுத்து நின்றவர்களைக்கண்டு அஞ்சி அடக்குமுறையே கதியென நம்பச்செய்தது.

1946-ம் ஆண்டிலே தாய்லாந்து ஆட்சிப் பீடத்திலே பிரதான அங்கம் வகித்த பிரீடி (Ptidi) என்பவர்தான் போர் முழக்கம் செய்வோரின் அணிவகுப்பிலே இன்று இருந்து வருகிறரென்றால் புரட்சியின் வளர்ச்சியை எந்த அளவிலே மிகைப்படுத்தி எழுதுவது! அன்று பிரீடி, ஆட்சியிலே இருந்தபோதே அமெரிக்கா போன்ற நாடுகளுக்கு தாய்லாந்து அடிமையாக்கப்படுவதை திட்டவட்டமாக எடுத்துக்கூறி எதிர்த்து வந்தார். எதிர்ப்பு ஆட்சி மன்றத்திலே அவர் ஒருவரிடமிருந்துதான் கிளம்ப வேண்டியிருந்தது. ஆட்சியிலே அமர்ந்திருந்த அத்தனை பேரும் சிங்கார மண்டபத்தின் சிலைகளாகவே யிருந்தனர். ஒரு குரல் பலபலரை எழுப்பும் சக்தி பெற்றதுதான், ஆனால் அந்த சக்தி ஆட்சி மன்றத்தாரிடம் வேலைசெய்ய இயலவில்லை. பதுமையிடம் பேசி பசியைத் தீர்த்திட வேண்டி நின்ற குருடனின் கதிதான் பிரீடிக்கும் ஏற்பட்டது! நிலா மோகினி—அமாவாசை இருட்டமுகனோடு ஒத்து வருவாளா? திரும்பிப் பார்த்தாலே அதே ஒரு திருவிளையாடல் புராணத்திலே பாகவதமாகி விடுமே!

பிரீடி, ஆட்சி மன்றத்துக்கு வெளியே தனது உரிமைக் குரலை எழுப்பினர். குரல் குவலயத்தினரை ஆச்சரியமடையும் அளவிலே அணிவகுப்பை வேக வேகமாக ஏற்படுத்தியது! ஆட்சிபீடம் வழக்கமான ஆர்ப்பரிப்பைத் துவக்கியது. சற்று நேரத்துக்கு முன்பு ஆட்சியை நிர்வகித்தவரை சதிகாரராக்கிக் காட்டியது ஆட்சிபீடம்! வேண்டாதவனை கண்டனச் சொல் பலகூறித் தம்மிடமிருந்து துண்டித்துக்கொள்ள எண்ணுவோர்போல, பிரீடி

மீது குற்றப் பத்திரிகை படித்துக் கூண்டிலே போட்டு விட துரைத்தனம் துடியாய்த் துடித்தது!

அந்தஸ்தை தங்கள் அளவிலே காப்பாற்றிக்கொள் வதற்காக தாய்லாந்து அரசினர் தம்மவர் நாட்டை அமெரிக்கா போன்ற அயல் நாடுகளுக்கு அடகு வைக்கும் நிலை அரும்புவிட்டுக் கொண்டிருந்தபோதுதான் பிரீடி போன்றோர் வெளியேறினர் நாட்டு மக்களுக்கு நல்வழி காட்டுவதற்காக. அந்த நேரம் தாய்லாந்தைச் சுற்றி யுள்ள நாடுகள் முழுவதுமே, புரட்சிப் புயலால் தாக்கப் பட்டுக்கொண்டிருந்தது. வியட்நாமிலே ஜப்பானியரை விரட்டியதற்குப் பின்பு பிரெஞ்சு ஏகாதிபத்தியத்தை வியட்நாம் விடுதலை விரும்பிகள் நேரடியாக எதிர்த்துத் தாக்க ஆரம்பித்தனர் ராணுவ முறையோடு! சீனாவிலே புகைந்த புரட்சி புதுமைப் பாதையிலே வெற்றி நடை போட்டு வளர்ந்தது! மலேயாவிலே ஆதிக்கபுரியினரை எதிர்த்து ஆர்ப்பரிப்பு! பர்மாவிலே பாராள பாட்டாளி வர்க்கம் போர் முழக்கம் செய்தது! இந்த மாதிரியான முறைகளிலே தாய்லாந்தை அடுத்த நாடுகளிலே எழுச்சி எரிமலை வெடித்தது!

தவக்கோலம் பூண்டவர் சாந்திக்காக—தளிர்மேனி யாளைக் கண்டுவிட்டதும் மோக வலையிலே சிக்கியவராய் மோட்சலோக வழிகாட்டி நாம் என்பதையும் மறந்து மோசடி செய்யாதே வாடி என்னோடு என்று பாடித் தனது தவக்கோலத்துக்கே தவறு செய்தவராகிடுவோரைப் போல தாய்லாந்து அரசினர் நாடு, நாட்டு மக்கள், அவர்கள் சுபீட்சம் என்றெல்லாம் அரசியலில் நல்வழி காட்டுவோர்போலப் பேசி......... சுயநல சுந்தரியிடம் சிக்காதவர்கள்போல நடித்துக் காட்டி......... துறவி துடியிடையைக் கண்டதும் துதி பாடியதைப்போல, எழுச்சி எரிமலை அண்டை நாடுகளிலே குமுறிவெடித்தும் வெளிப்படையாகவே தங்களது நச்சு நினைப்பைக் காட்டத் துவங்கி விட்டனர் தாய்லாந்து துரைத்தனத்தார்! சுயநல

சுந்தரியின் சுந்தராங்கன் நான் என்று பேசிக்கொள் வதிலே அவர்கள் பெருமைப்பட்டனர்!

வியட்நாமியர் தாய்லாந்திலும் ஏராளமாகக் குடி புகுந்திருந்தனர். அங்கே வாணிகத் துறையிலே பெரிய அளவிலே தங்களது நிலைமையை வியட்நாமியர் ஸ்திரப் படுத்திக் கொண்டனர். வியட்நாமிலே தலைவர் ஹோ வழிகாட்ட புன்னகைப் பூங்காவிலே மக்கள் உலவினர். இந்தோ-சீனு முழுவதுமே. விடுவித்துவிட அவர்கள் திட்டம் தீட்டி பணியாற்றிக் கொண்டிருந்தனர். ஹோ படை வீரர்களின் போர்ச் செய்திகள் புது உணர்ச்சியை நித்தம் நித்தம் தாய்லாந்திலே இருந்தவர்களுக்கு ஏற் படுத்திக்கொண்டு வந்தது. தாய்லாந்திலே சிறுசிறு கடைகள் முதல் கொண்டு பெரிய தனிப்பட்டோர் அலுவலகம் உட்பட வியட்நாமின் விடிவெள்ளி ஹோ சிமினின் புகைப்படம் காட்சியளிக்க ஆரம்பித்தது!

பக்கத்து நாட்டிலே புரட்சி! அந்தப் புரட்சிக்குக் காரணமும் வழிகாட்டியுமான தலைவரின் படம் தாய்லாந் தின் மூலைமுடுக்கெல்லாம் மாட்டப்பட்டதன் காரணம் தத்தளிக்கும தாய்லாந்துக்கும் ஹோ போன்ற தலைவர் களும், அவர்கள் உள்ளத்திலே தாங்கிய புரட்சிக் கொள்கையும் தேவை என்பதை எடுத்துக் காட்டுவதற் குத்தான்! ஹோவின் படத்தை மட்டுமல்ல தாய்லாந் தியர் தங்கள் நாட்டிலே மாட்டியது. தங்களின் வருமா னத்திலே ஒரு பகுதியை வியட்நாமின் புரட்சிப் படை யினருக்கு அனுப்ப ஆரம்பித்தனர் — தொழிலாளத் தோழர்களின் ஆர்வம் இதிலே பெரிய அளவாகியிருந்தது!

தாய்லாந்து ஆட்சி பீடத்தின் ஆணவ ஆர்ப்பரிப்பு அதன் எல்லையைத் தொட்டது. பிரீடி தலைமறைவாக வேலையைத் துவங்கினுர். இப்போதைய பிரதமர் விபுல சங்கிரம் அமெரிக்க ஆதிபத்தியத்தோடு தாய்லாந்து மக்களை சிக்கவைத்து விடுவதிலே அடங்காத ஆவல்

கொண்டிருப்பவர்! அமெரிக்கா அளித்த கப்பலை அக மகிழ்வோடு ஏற்ற ஒரு சம்பவமே அவரைப்பற்றி நமக் கெல்லாம் நன்ருக அறிமுகப் படுத்துகிறதென்றால் அவரது உள்ளத்திலே உந்திக் குதிக்கும் பூரா எண்ணங் களையும் கூறியா அவரை நாம் அறிமுகப்படுத்த வேண்டும்?

பிரீடி விதைத்த புரட்சிவித்து அரசியல் அலுவல ரிடையேயும் வளர்ந்து வருகிறதென்ற உண்மையைத்தான் சமீபத்திலே கடற்படை வீரர்கள் நடத்திக் காட்டிய புரட்சி, உலகுக்கு விளக்கிக் காட்டுகிறது! சரியான சமயத்திலே சவுக்கடி தந்திருக்கிருர்கள் கடற்படையினர் எதேச்சதிகாரிகளுக்கு! அமெரிக்காவின் அன்புப் பரிசில் தாய்லாந்து துறைமுகத்திலே வந்தடையும்போதே ஒரு பலமான அதிர்வேட்டு! அது அமெரிக்காவுக்கு மட்டு மல்ல, அகில உலகிலுமுள்ள ஏகாதிபத்தியப் பித்தர் களுக்கு ஏற்பட்ட ஒரு பலமான பேரிடி! கடற்படை புரட்சியை அடக்கிவிட்டதாக இப்போது செய்திகள் வந்துகொண்டிருக்கின்றன வென்ருலும் உலக ஆதிபத் தியத்தினர் அதை நம்பவில்லை என்பதோடு நடுக்கத் துடனேயே இருந்து வருகின்றனர்...... இன்று அடக்கப் படும் எழுச்சி நாளை குமுறி எழப்போகிறதே என்ற காரணத்தால்!

இன்றைய தாய்லாந்திலே எழுச்சிக் காளைகளுக்கும் எதேச்சதிகாரிகளுக்குமிடையே ஒரு பலமான தாக்குதல். இரண்டிலொன்று முடிவு காணவேண்டிய போராட்டம் துவங்குவதற்கான சூழ்நிலை வெகு தூரத்திலில்லை! இரண்டாம் உலகப்போர் நடந்து முடிந்தபோது இப் போதைய தாய்லாந்தின் பிரதமராய் இருப்பவர் சர்வாதி காரம் எப்படி எப்படிச் செய்வது என்பதைக் கண்டறிய சர்வாதிகாரிகளின் வாழ்க்கை வரலாறுகளைத் தேடிப்

பிடித்துப் படித்து வந்தாராம்! சர்வாதிகாரிகளின் வரலாற்றை மேல்வாரியாகப் பார்த்ததுமே தானும் ஒரு சர்வாதிகாரியாக இனி நாட்டிலே உலவுவது என திட்டமிட்டுக் கொண்டாராம்! சர்வாதிகாரிகளின் முடிவு அத்தியாயத்தை அவர் படிக்க மறந்தாரோ அல்லது படித்தும் மறந்தாரோ தெரியவில்லை! தான் கற்ற பாடத்தை அமுல் நடத்த ஆட்சிப் பிரதமர் பீடமும் அவருக்குக் கிடைத்தது! காலம் சந்தர்ப்பப் பாதையைப் போட்டது. பிரதமரும் சர்வாதிகாரக் குதிரைமேலேறி அமர்ந்து தனது பயணத்தைத் துவக்கினர்!

சந்தர்ப்பப் பாதையிலே பிரதமரின் சர்வாதிகாரக் குதிரை ஓடிக்கொண்டிருந்தபோதுதான் புரட்சியை வளர்த்த சூழ்நிலையையும், விடுதலை வீரர்களின் வரலாறுகளையும் பிரீடி விரும்பிக் கற்ருர். ஏடுகளிலே அவர் அறிந்த புரட்சியை நாட்டிலே நடமாட வைத்தால் நாடுகளிலே உள்ள காடுகள் திருத்தப்படுமென பிரீடியின் உள்ளம் எண்ணியது! புரட்சியின் வரலாற்றினைத் தெளிவோடு கற்றுத் தேர்ந்தவர் புரட்சிப் பாதையை அமைத்து ஆயிரமாயிரமாகக் கூட்டுத் தோழர்களோடு அணிவகுத்து நடக்கத் துவங்கினர்! சர்வாதிகாரக் குதிரை வேகமாக ஓடுகிறது அது தாங்கிக்கொண்டுள்ள பிரதமரையே கீழே தள்ளிவிடும் அளவிலே! இப்போது தான் அல்லல்படுகிருர் பிரதமர் தாம் சர்வாதிகாரக் குதிரைமேல் ஏறியது தப்பு என்று! ஆனல் இதே நேரத்திலே தலைமறைவாக இருந்தாலும்...... புரட்சிப் பாதை புன்னகைபுரியின் சமீபத்தை நோக்கி அந்தப் பாதையிலே அணிவகுத்து வந்தோரைக் கொணர்ந்து சேர்த்திருப்பதை எண்ணி எக்களிப்பிலே பரவசக் கீதமிசைக்கிருர் பிரீடி.

இரண்டுபேரும்—பிரதமரும் பிரீடியும் முறையே சர்வாதிகாரம் பற்றியும்—ஜனநாயகம் பற்றியும் ஒரு முடிவுக்குவர இன்று அல்ல, அன்றே இரண்டாம் உலகப்

போர் முடிந்த காலத்திலேயே தீர்மானித்துக்கொண்டனர். இருவர் திட்டங்களும் வளர்ந்தன நடைமுறையாக! இன்று நேருக்குநேர் மோதும் சூழ்நிலை தாய்லாந்திலே இருவருக்கும்! மோதுதல் மோடியை வளர்க்கும்! ஆனால் இறுதிவரை மோதிப் பார்த்துவிட வேண்டியதுதானென்ற கொள்கை இருவருள்ளத்திலுமே இருப்பதால் பலத்த இறுதி மோதுதலால்தான் வெற்றி தோல்வியை அறியமுடியும்!

தாய்லாந்தின் இன்றைய அரசராகவிருக்கும் பூமிபோன் அமெரிக்காவிலே பிறந்தவர்தான்! அமெரிக்க நப்பாசைக்கு அவர் இணங்கி வருவதிலே ஆச்சரியமில்லை! வழுக்கி விழுந்தவளுக்கு வேறு ஒரு வழுக்கிய வனிதை துணையாவதிலே ஆச்சரியம் காணமுடியாது! ஆனால் ஆச்சரியமானது எது என்றால் பூமிபோனின் வாழ்வுக் காலத்திலேயே நான்கு முறைதான் தாய்லாந்து வந்து தங்கியிருக்கிறார் என்ற செய்திதான்! தாசிலோலன் எப்போதோ தனது வீடு திரும்பிப் பார்த்து மறுபடியும் அவளே கதியென சரசியை நாடி ஓடி ஆடிப்பாடிக் களிப்பதைப்போல! எப்போதாவது தாய்லாந்து வருவார். அதிலும் தலைநகரிலே (பாங்காக்) மட்டும் தங்கி உடனே திரும்பி விடுவார் மேலைநாட்டு உல்லாச நிகழ்ச்சிகளிலே கலந்திடுவதற்காக! அவரது வயது இருபத்திமூன்று...... இளமை துள்ளும் பருவம்; இன்ப வீணையை அந்த இளவரசர் இதயத்திலே மீட்டிக்கொண்டிருக்கும் பாக்யத்தை...... தாய்லாந்தின் அம்பாஸிட்டராக முன்னர் லண்டன் மாநகரிலே தங்கியிருந்தவரின் திருக்குமாரி பெற்றாள்! ஆமாம் அந்த இளவரசரின் வாழ்க்கைத் தோழியராக்கப்பட்டாள் அந்த மாது சிரோன்மணி!

சமீபத்தில்தான், இந்த ஓரிரு மாதத்துக்குள்தான் பெண் குழந்தை யொன்றுக்கு அந்த மன்னர் தம்பதிகள் பெற்றோ ரானார்கள்.

நாட்டின் அரசர்......முன்னர் வயதிலே சிறுவராக இருந்தார்! இப்போதோ திருமணமும் ஆகி குழந்தை யொன்றுக்கும் தந்தையாகி விட்டார்! ஆனால் அவர் போக்கிலே மட்டும் மாற்றமில்லை. நாடும், நாட்டு மக்களும் எப்படியானாலும் கவலையற்றவராக ஊர் சுற்று கிறார். அவரே அடிக்கடி கூறுகிறாராம் "நான் அரசனாக இருக்க விரும்பவில்லை" என்று! அவருக்கு விருப்பமில்லை யாம் அரசர் பதவியிலே இருக்க. அரசரே இதைக் கூறு கிறார்—ஒரு முறையல்ல, பல முறை! இந்த எண்ணங் கொண்டவரின் ஆளுகையிலே மக்கள் எதை எதிர்பார்க்க முடியும்? விருப்பமில்லாதவன், வீதியிலே தூங்க விரும்பு பவன்—அவனைப் பிடித்து இழுத்துவந்து வீட்டிலே கட்டிலிலே படுக்க வைத்தாலும் வீதியை நோக்கி எழுந்து தான் ஓடுவான். இது சாதாரண உண்மை! எல்லோருக் குமே புரிந்துவிடக் கூடியது. ஆனால் தாய்லாந்து அரசினர் இந்த உண்மையைப் புரியாமலிருக்கிறார்களென நான் கூற வரவில்லை...... அவர்கள் மிகத் தெளிவாகப் புரிந்திருக்கிறார்க ளென்றாலும் — கபோதியைக் கனித் தோட்டத்துக்குக் காவலாக வைத்துவிட்டுப் பேருக்குக் காவல் இருக்கிறான் என்று கூறிவிட்டு யாருமறியா வேளை யிலே வேலிதாண்டி கனி திருடும் கல்நெஞ்சர் நிலையிலே தாய்லாந்து அரசினர் உலவி பூமிபோனை—பதுமையாக வைத்து, அந்தப் பதுமையின் மறைவிலே சுரண்டல் வேலையை நடத்துகிறார்கள். தாய்லாந்திலே சுரண்டல்

வேலையை அந்நியரும் நடத்துகிறார்களென்றால், எப்படி நடத்தாமலிருக்க முடியும்? அரசர் ஊர் சுற்றுகிறார்! பிரதமரோ சர்வாதிகாரக் குதிரையிலே தலைகுப்புற விழும் நிலையிலே பயணம் செய்கிறார். இந்த நிலையிலே சுரண்டல் சுவையை ருசி பார்த்தவர்கள் தங்களது திட்டத்தை எப்படி நடத்தாமலிருப்பார்கள்!

மக்கள் விழிப்படையும் வரை அந்தநிலை வளர்ந்து கொண்டிருக்கும்; விழிப்பு எழுச்சிக் குரலாக மாறி எரிமலை வெடிக்கும்போதுதான் எத்தரும் அவரடிதொழும் பித்தரும் எக்கச்சக்கமான நிலையிலே சிக்கிக்கொள்வர். தாய்லாந்தின் இன்றைய நிலை சர்வாதிகாரப் போக்கில் சிக்கி தொல்லையுறும் நாடுகளுக்கு ஒரு எடுத்துக் காட்டாகும்.

# திபேத்

நாகரிகமே புரியாத நாடு—அதிலும் குருட்டு நம்பிக்கை வேறு அந்த நாட்டுப்போக்கிலே புகுந்து விட்டால் எந்த ஒரு நாடுமே காடாகத்தான் காட்சி தரும்! அங்கே உலவுகிற மக்களினம்—பரிதாபத்தின் சின்னமாகத்தான் கருதப்படும்! எண்ணத்தையும், எழுச்சியையும் எங்கெங்கோ கண் காணு இடங்களுக்கெல்லாம் விரட்டியடித்து புதுப்புது கண்டுபிடிப்புகளைச் செய்து வாழும் நாட்டை சுவர்க்க வாயிலாக ஆக்கிக் கொண்டிருக்கும் ஆற்றலரசர்களும், விஞ்ஞான விடி வெள்ளிகளும் உலவுகிற புத்துலகத்தின் முன்னே, பழமை பேசி குருட்டு மண்டபத்திலே நுழைந்து செல்லும் நாகரிகம் புரியாத நாடும், அந்த நாட்டு மக்களும் நடைப் பிணங்கள்தான்! புதுமையை விரும்பியவன் முன்னேற்றப் பாதையில் எவ்வளவோ தூரம் அடி எடுத்து வைத்து பயணம் செய்து விட்ட பிறகும்-பழமைப் பைத்தியங்கள் மூக்கிலே விரலை வைத்து ஆச்சரியப்படும் நிலைதான் நாட்டிலே வளர்ந்து கொண்டிருந்தது. புதுமையாளர்களின் பக்கம் வேகவேகமாக இல்லாவிட்டாலும் அடிமேல் அடிவைத்து நகர்ந்து அவர்களைப் பின் தொடர்ந்திருந்தாலாவது......இன்றைய உலகிலே ஏற்பட்டிருக்கக் கூடிய இவ்வளவு பெரிய வேற்றுமை பழமைக்கும்-புதுமைக்குமிடையே ஏற்பட்டிருக்காது என்பதோடு பழமை ஒழிக்கப்பட வேண்டிய சின்ன

மென்பதை உலகினர் முழுவதும் ஒப்ப வேண்டிய நிலை ஏற்படும்!

பழமை—நாட்டுப் போக்கிலே பெரும்பாலும் வளர்த்தவர்கள் சூது எண்ணங் கொண்ட சுயநலமிகள்தான்! அவர்களின் ஏமாற்றுத் தனத்துக்கு மக்களினம் அடிமைப் பட்டிருந்தால்தான் இயலுமென்பதை அவர்கள் மிக நன்ருகப் புரிந்து வைத்திருந்தார்கள்! மக்களினம் அடிமைப் படவேண்டுமாளுல்...கூட்டாக அந்தச் செயலை ஒரே நேரத்தில் முடித்துவைக்க ஆட்சிபீடத்தின் துணை—தேவைப்படும் ஒன்று என்பதையும் சூழ்ச்சிக்காரர்கள் அறிந்திருந்தார்கள்!

எனவே, ஆட்சியைக் கைப்பற்றியோ, அல்லது ஆட்சியாளனின் ஆதரவைக் கொண்டோ சூழ்ச்சித் திட்டத்தை விரித்தால் மக்கள் அவர்களின் ஆசை வலையில் விழுவது நிச்சயம் என்பதோடு என்றென்றும் மக்களினம் மீள முடியாத நிலை ஏற்படவும் வழி வகுத்து விடுகிருர்கள்!

சுயநலவாதிகளின் இம்மாதிரியான சூழ்ச்சித் திட்டங்களிஞல், நிலையிழந்து போன நாடுகள் எத்தனை எத்தனையோ! ரோஜா மலரும் பருவத்திலே இரும்புக் காத்தால் நசுக்கப் படுவதுபோல, மலர்ச்சிப் பாதையிலே அரும்பு விட்டுப் புதுமலராகப் பொழிய வேண்டிய நாடு, சந்தர்ப்பங்களையெல்லாம் நாசமாக்கிக் கொண்டு எத்தனையோ நாடுகள் சரிந்து வீழ்ந்திருக்கின்றன—அந்தச் சூழ்ச்சிக்காரர்களின் ஒரே சூதுத் திட்டத்தால் மட்டும்! புதுமை மாடி ஏறி உலவ இருந்த நூற்றுக் கணக்கான நாடுகள், புதுமை மாடியின் படிகளிலே கால் வைத்து ஏறிக் கொண்டிருந்த நேரத்திலே அதன் காலைப் பிடித்திழுத்து விட்டனர் ஏமாற்றுத் தனத்தையே கலையாகக் கொண்ட பழமைப் போக்கினர்! அவர்களின் தீச் செயலால் வீழ்ந்துவிட்டு, பின் ஓடோடி மாடி ஏற எத்தனை எத்தனை ஆண்டுகளோ கழிந்தன! புதுமை மாடி ஏறுவோ

ரைக் கரம்பிடித்துப் பழமை வாதிகள் இழுத்து விட்டுக் கொண்டேதானிருந்தன ரென்றாலும், சரிந்து, சரிந்து வீழ்ந்து கொண்டேயிருந்த நாடுகள் சரிந்த நிலையிலேயே இருந்து விடவில்லை. மேலும், மேலும் முயன்று மாடி ஏறி, புதுமைத் தென்றலின் இனிமையை மாடியின் உச்சியிலே அனுபவித்துக் கொண்டுதான் வருகின்றனர்!

..........அந்த நாடுகள் வரிசையிலே—இடம்பெறும் ஒரு நாடுதான் திபெத்! எத்தனை எத்தனையோ பழமை வாதிகள் திபெத்திலே உலவி ஆளுக்கொருமுறையாக, ஆண்டுக்கொரு முறையாக பழமைப் பாசுரங்கள் இயற்றி.........மேலும் மேலும் திபெத்திய மக்களை தொல்லை நிலைக்கு இழுத்துவிட்டு வந்தனர்! அந்த நாடு சரிந்து சரிந்து எழுந்த நிலை.........சரிதத்திலே காணக் கிடக்கிறது! திபெத்திய சரித்திரத்தைப் படிக்கும் பாரும் மிகத் தெளிவாக உணர முடியும்...........எவ்வளவோ பெரிய கோர பழமைத் தாக்குதலுக்கு ஆளான நாடு அது என்பதை!

திபெத்தின் சரித்திரம் சரித்திராசிரியர்களுக்கு, கி. பி. ஏழாவது நூற்றாண்டுக்குப் பின்னிருந்த நிகழ்ச்சிகள் மூலமாகத்தான் கிடைத்திருக்கின்றன. கி. பி. ஏழாவது நூற்றாண்டுக்கு முன் திபெத் நிலை சரித்திர ஆசிரியர்களுக்கே ஒரு புரியாத புதிராக இருந்து வருகிறது. எந்த அளவுக்கு திபெத் மற்ற உலக மக்களினத்திலிருந்து மறைந்து கொள்ள முடியுமோ அந்த அளவுக்குமறைந்து கொண்டுதானிருந்தது. ஆனால், ஏழாம் நூற்றாண்டிலிருந்து அதன் நிலை ஓரளவு நாமெல்லாம் புரியக்கூடிய முறையில்-சரித்திராசிரியர்களால் உண்மை நிலை அதன் படம் பிடித்துக் காட்ட முடிகிறது!

ஆதிகால திபேத்தியன், சென்-ரே-சியை கடவுளின் அவதாரம் என்று கருதி வந்தான். சென்-ரே-சி, கருணையின் எல்லை என்று திபேத்தியர்களால் போற்றப்படும்

குலதெய்வம். அதன் வழித்தோன்றல்கள்தான் நாங்களென பெருமையடித்து வந்தனர் திபேத்தியர். அவர்களின் அந்த நிலையை மதிவாதிகள் வளர்த்து வந்தனர். எத்தனை எத்தனையோ கற்பனைக்கதைகள் கருணைக் கடவுளைப் பற்றிக் கிளம்பின. அத்தனையும் சென்ரேசியின் அற்புதத் திருவிளையாடல்களென எண்ணி திபேத்தியர் மகிழ்ந்தனர்! சூதுத் திட்டம் சுயநலத்துணையால் கோர வடிவெடுப்பதை அப்போது யாரும் எண்ணவில்லை என்பதோடு, அதை விளக்கிக் கூற ஆள் கிடைப்பது எப்படி? குருட்டு மண்டபத்திலே திபேத்தியர் அத்தனை பேருமே நுழைந்து கொண்டனர்.

அந்த 7-ம் நூற்றாண்டிலே அரசனாக இருந்த சாங்–சான்–காம்போ என்பவனும் மக்களின் குருட்டுப் போக்கை மேலும் வளரச்செய்தான். காம்போ ஒரு பெரிய வீரன் என்பதைச் சரித்திராசிரியர்கள் பலபடக் கூறுகிறார்கள். சீனத்தையும், வட இந்தியாவையும் காம்போ போருக்கழைத்து வெற்றிபெற்றிருப்பதொன்றே காம்போவின் வீரதீரத்தை உலகுக்கு அறிமுகப்படுத்துகிறது! போர் பல செய்து வெற்றிமாலை சூடிய இதே காம்போவால்கூட பழமை அழிக்கப்பட வேண்டியதொன்று என்று எண்ண முடியவில்லை! பரிதாபம்...... அவனது வீரம் தீரம் எல்லாமாகச் சேர்ந்து நாடு பிடிக்கும் நப்பாசையிலேயே இருந்து வந்தது. அவன் எண்ணவில்லை, நாம் போரிடவேண்டியது—மாற்று நாட்டு அரசகளிடமல்ல மக்களை மடியச் செய்துவரும் மதவாதிகளிடம் நமது வீரதீரத்தைக் காட்ட வேண்டுமென. காம்போ எண்ணவில்லை என்பதோடு பழமையின் கொடுமையை, அதன் நாச சக்தியைப்பற்றி நினைக்கவே மறந்து போய்விட்டான். நல்ல சட்ட நிபுணன் காம்போ என்று வரலாற்றாசிரியர்களால் வாழ்த்தப்படுகிறது! புத்தமதத்தை திபேத்தில் தலைநீட்டும்படி செய்த முதல் மன்னனும் காம்போதான் என்று போற்றுதலையும்

சரித்திராசிரியர்கள் அந்த மன்னனுக்கு அளிக்கிறார்கள். என்றாலும், நமது கவனத்தைக் கவருவதெல்லாம், புத்தர் கொள்கைகளை மதமாகத் தன் நாட்டிலே உலவ அரும் பணியாற்றிய காம்போ சீனம்போன்ற பெரு நாடுகள்மீது ஆண்டுக் கணக்காகப் போர் நடத்தி வந்திருக்கின்றான் என்பதே. இதிலிருந்து தெளிவாக நமக்கெல்லாம் புரிவது என்னவென்றால், எந்தெந்தக் கொள்கையை எப்படி எப்படிப் புரிந்து அமுல் நடத்துவது என்ற நிலையிலேயே காம்போ இல்லாமல் தன் மனதுக்குப்பட்ட எதேச்சதிகாரத்தில் அவன் காலத்தில் திபேத்தை ஆண்டுவந்தான். காம்போவின் மனநிலையை நன்றாக அறிந்திருந்த மதவாதிகள் மேலும் மேலும் துதிபாடி மாற்று நாட்டுமீது காம்போவை போர் தொடுக்கும்படி செய்துவிட்டு, மன்னன் ஊரிலே இல்லாத சமயம் தங்களது—தர்பார் ராகத்தை மதவாதிகள் இசைத்துவந்தனர். காம்போ சீனத்தின்மீது போர் செய்து வெற்றிகண்ட சந்தர்ப்பத்திலே, சீன அரச பரம்பரையில் தோன்றிய மாதொருத்தியைக் கண்டு காதலித்துத் திருமணமும் முடித்துக்கொண்டான். அவளின் தூய உள்ளத்தால்... காம்போ சிறுகச் சிறுக திருத்தப்பட்டு வந்தான்! உண்மையாக ஆட்சியை எப்படி இயக்குவது? புத்தரின் உண்மைக் கொள்கைகள் என்னென்ன?... என்பவைகளையெல்லாம் அந்த சீனத்து அழகி விளக்கிக் கூறியதற்குப் பின்பு ஆட்சிப் பொறுப்பை ஆர்ப்பாட்டமின்றி காம்போ நடத்திவந்தான்! காம்போவின் ஆட்சியில்தான் லாசாவை திபேத்தின் தலைநகரமாக ...க்கினான். அங்கே பொடா என்ற பிரசித்திபெற்ற அழகிய அரண்மனையையும் அமைத்தான். தலைலாமாக்கள் பரம்பரை பரம்பரையாக அந்த அரண்மனையிலே வாழ்ந்துவர அப்போதுதான் காம்போவால் அனுமதிக்கப் பட்டார்கள்!

காம்போவின் மறைவுக்குப் பிறகு மாங்சன் என்ற பெயருடைய காம்போவின் மகன் ஆட்சிப் பொறுப்பை

ஏற்றுக்கொண்டான். இவனது ஆளுகையிலாவது பழமைப் போக்குகள்—ஓரளவுக்கு ஒழிக்கப்பட்டு நல்லாட்சியூர் நோக்கித் திபேத் பயணம் செய்யுமென உலகினர் உள்ளத்திலே நம்பிக்கை நட்சத்திரம் ஒளிவிட்டுக்கொண்டிருந்தது! ஆனால்... நிலே காம்போ ஆட்சியைப்போன்றதாகத்தானிருந்தது! அவனுக்குப் பிறகு ட்சுக்-ட்சா என்ற அவன் மகன் பட்டமேறினான்! அவன் நிலையும் முன்னதுபோலவே! அதற்கும் பிறகு டிசாங் சிங்காதனமேறினான்! நாடு பிடிக்கும் ஆசை இவனுக்கு உச்சநிலையிலே இருந்தது. திபேத் மக்கள் என்ன இழிநிலையிலே வாழ்ந்தாலும் தமக்கு வேலை இல்லையென ஊர் சுற்றி நாடுகளை வேட்டையாடினான். மேற்கு திபேத்தின் பல பாகங்கள் அந்நியர் பிடிப்பிலிருந்து டிசாங் முயற்சியினால் விடுவிக்கப்பட்டது! இவனது ஆளுகையிலே உள்நாட்டு மதவாதிகள் மட்டும் பேயாட்டம் ஆடவில்லை. வெளி நாட்டிலிருந்தும் மத குருக்கள் திபேத்துக்கு வருகை தந்தனர். வெளிநாட்டிலிருந்து வந்த பழமைக் குருக்களும், உள்நாட்டிலே இருந்த பழமைக் குருக்களுமாகச் சேர்ந்துகொண்டு வீதிக்கு வீதி மடாலயங்களைத் தோற்றுவிப்பதும் கற்பனைப் புராணங்களை ஏடுகளிலே எழுதி மக்களிடம் நீட்டுவதுமாக பழமைப் போக்கை திபேத்தின் மூலைமுடுக்கெல்லாம் வளர்த்துவரத் துவங்கினர், வேக வேகமாக! 9-வது நூற்றாண்டிலே ரால்பாசான் என்ற அரசன் பட்டத்தை ஏற்றுக்கொண்டான். அந்த 9-வது நூற்றாண்டிலே வேத விளக்கவுரையாளர்களும் மத சம்பந்த நூல்களும் மலிந்தன! புத்தர் கொள்கைகளை மதமாகப் புகுத்தி பழமையை அதிலே எந்தெந்த உருவிலே நடமாடவிட முடியுமோ அது அவ்வளவையும்தான் விரும்பிய வகையில் அரசன் ரால்பாசான் பணியாற்றினான். இந்தப் போக்கு அரசனின் தம்பி லாங்தர்மாவுக்குப் பிடிக்கவில்லை என்பதோடு அவன் திபேத்திலே புத்தமத எதிர்ப்பு இயக்கத்தையும் நடத்திவந்தான். நாளடைவிலே எதிர்ப்பு இயக்கத்தின் தலைவனாக இருந்த

லாங்தர்மா...... அரசனின் தாக்குதலைத் தாங்கமுடியாத நிலையிலே இருந்தவன்...... ரால் பாசானைக் கொலை செய்துவிட்டு—சிங்காதனத்தைக் கைப்பற்றிக் கொண்டான்.

அப்போது அங்கே பெரிய அளவிலே பரவிவந்த புத்த மதத்தினருக்கு இது சகிக்கமுடியாத அவமானமாகி விட்டது! கொலைக்குப் பதில் கொலை செய்ய புத்தமத வாதிகள் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து வந்தனர். அவர்கள் ஆசையையும் விரைவிலேயே தீர்த்துக்கொண்டனர்—லாங்தர்மாவைக் குத்திக் கொலை செய்ததன் மூலமாக!

லாங்தர்மா ஒழிக்கப்பட்டதற்குப் பிறகு பரம்பரை பரம்பரையாகத் திபேத்தை ஆண்டுவந்த முறைக்கு முடிவு ஏற்பட்டது. திபேத்தை இதுவரை ஆண்டு வந்தவர்களின் பரம்பரை லாங்தர்மாவுக்குப்பின் ஆட்சிபீடம் ஏறவே இல்லை! லாங்தர்மா ஒழிக்கப்பட்டதும்—குட்டி ஜமீன்கள் கொட்டம் எல்லை மீறியது. துண்டு துண்டாக திபேத்தின் பல பகுதிகளிலே ஜமீன் வாரிசுகள் ஆதிக்கத்தைத் துவக்கினர். திபேத்தியர் பல வழிகளிலே தாழ்த்தப்பட்டனர். அரசியலிலே அநாதைகளாக்கப் பட்டனர். சமூகத்திலே மத குருமார்களின் பேயாட்டம். வாழ்க்கை — மரணபுரிவாசமாகியது. இம்மாதிரியான முறைகளிலே திபேத் மக்கள் சிதைந்துகொண்டிருந்தனர்.

பதினொன்றும் நூற்றுண்டிலே இருந்து — லாமியம் (Tamaism) திபேத்திலே பரவ ஆரம்பித்தது ஆட்சி பீடத்திலும் சாக்கிய லாமாக்கள் பிரசித்தமடைந்தார்கள். சிறுகச் சிறுகப் பரவி வந்ததுபோய் திபேத் முழுவதுமே லாமியம் நன்றாகப் பரவியது. அதன் வளர்ச்சிக்கு அப்போதைய சீன மன்னனுக இருந்த குப்லேகான் பெரிய அளவிலே ஆதரவு தந்தான். அந்த ஆதரவின் அஸ்திவாரத்திலே சாக்கிய லாமாக்கள் 70 ஆண்டுகள்வரை

(1345-ம் ஆண்டுவரை) தங்களது பரம்பரை ஆட்சியை திபேத்திலே நடத்தி வந்தனர்.

சாக்கிய லாமாக்கள்—பழமையின் பிரதிபிம்பங்கள்! எவ்வளவு முடியுமோ அவ்வளவு மந்த புத்தியை மத போதனை மூலமாக மக்களிடம் பரவச் செய்தார்கள். விநாடிக்கு ஒரு தத்துவார்த்தம் பேசி—எதைக் கண்டாலும் அதற்கோர் புராணமுலாம் பூசி—மனிதன் எந்த நேரமும் நடுநடுங்கிக் கொண்டேயிருக்கும் ஒரு பிராணியின் நிலையிலே வாழ்ந்துகொண்டிருந்த திபேத் நாட்டை சாக்கிய லாமாக்கள் ஆண்டனர்!

1350-லே, சாக்கிய மதகுரு ஒருவர் திபேத் ஆட்சியை நடத்திவந்தார். அவரை சாங்சப் கியால்ட்சேன் என்ற பெயருடையவன் கொலை செய்துவிட்டு ஆட்சிப் பீடமேறி சித்யா வம்சத்தைத் துவங்கிவைத்தான். இவர்களின் ஆட்சியும் எந்த நேரத்திலும் ஆட்டங் கொடுத்துவிடுமென்றுதான் எல்லோரும் எதிர்பார்த்து வந்தனர். ஆனல் 1635-ம் ஆண்டுவரை சித்யா வம்சத்தார் ஆட்சி திபேத்திலே—நீடித்திருந்தது! 1635-லே சாங் மாகாணத்தைச் சேர்ந்த சிற்றரசனல் சித்யா வம்சத்தினர் ஆட்சிப் பீடத்திலிருந்து விரட்டி யடிக்கப்பட்டனர்.

பதினைந்தாம் நூற்ருண்டும் துவங்கியது—திபேத்தியருக்குக் கெட்டகாலம் முன்னையும்விடப் பெரிய அளவு விரிந்தது! சாங்—காபா என்ற பெயரிலே அப்போதைய திபேத்திலே உலவிய லாமா மதகுரு நல்லமுறையிலே பிரசித்தியடைந்தான்! அவன் இட்ட பணியை முடிக்க திபேத்தில் லட்சோப லட்சமாக மக்கள் காத்திருந்தனர். இந்த இவ்வளவு செல்வாக்கையும் மதப் பிரசாரத்தை முன்வைத்து சாங்—காபா பெற்றிருந்தான். பரிசுத்த குலம் என்ற ஒரு பிரிவை திபேத்தியரிடையே ஏற்படுத்தி வைத்து அவர்களிடம் சாங்—காபா கடுமையான சட்ட

திட்டங்களை அமுல் நடத்தினன். மது அருந்தக்கூடாது. திருமணம் போன்றவைகளை பரிசித்த குலத்தினர் செய்யாது தடுத்து, துறவி நிலையை திபேத்திலே புகுத்தினன். துறவி நிலையை விரும்பிய மக்கள் கூட்டம்...... சிலநாள் வரை சாங்—காபாவைப் பின்பற்றினர். நாளடைவிலே மஞ்சள் குல்லாய்கள் என்ற பெயரும் பரிசுத்த குலத்தினருக்கு ஏற்பட்டது. சாங்—காபா மதத் துறையிலே செல்வாக்கடைந்து காலப் போக்கிலே ஆட்சிப் பீடத்தையும் கைப்பற்றி விட்டான். சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்த அந்த சாது சிரோன்மணி டாஷி—லாவா என்ற பெயருடைய தனது மகனுக்கு சிங்காதனத்திலே இடம் அமைத்துக்கொடுத்தான்! சாங்-காபாவுக்கு மகன் ஒருவனிருப்பது ஆச்சரியமானதுதான்! திருமணமே செய்து கொள்ளாதவர்களின் கூட்டணியைச் சேர்த்து... துறவிக் கோலத்தை நாட்டிலே வளர்க்க எண்ணியவர் என்பது மட்டுமல்ல—அந்தத் திட்டத்தை நடைமுறையிலே காட்ட பெரியதோர் இயக்கங்கண்ட சாங்-காபாவுக்கு மகன் எப்படித் தோன்றினன் என்பதுதான் ஆச்சரியமானது! அவனைப் பின்பற்றியவர்களும் அது பற்றி சிந்திக்கவேயில்லை...... அந்த அளவுக்கு குருட்டு நம்பிக்கை அப்போது திபேத்திலே உலாவி வந்தது!

டாஷி—லாமாவும் மிகக் குறுகிய காலத்திலேயே மாண்டுபோனன். மஞ்சள் குல்லாயினருக்கு இது பெரிய ஏமாற்றமாகி விட்டது. வழி வழியாகத் தங்கள் ஆட்சியை ஸ்தாபிக்க நினைத்திருந்த அவர்கள் ஆட்சிப் பீடம் குறுகிய காலத்திலேயே அவர்களிடமிருந்து சென்று விடுவதைக்காண மனம் துடித்தனர்.

ஆகவே ஏதாவது திருவிளையாடல் நடத்தி மீண்டும் மஞ்சள் குல்லாய்க் காலத்தை ஸ்தாபிக்க அவர்கள் திட்டமிட்டனர். அவர்களின் திட்டப்படியே மக்களின்—முன் புதிய திருவிளையாடல் புராணத்தை நீட்டினர்! மாண்டு

போன டாஷி—லாமா குழந்தை உருவத்திலே மீண்டும் திபேத்தில் அவதரித்திருப்பதாகக் கூறி.. யாரோ ஒரு சிறுவனைப் பிடித்து ஆட்சியிலே அமர்த்தி மீண்டும் அவர்கள் பரம்பரை ஆட்சியைத் துவக்கினர்! இதற்குப் பின்னர் தொடர்ந்து அரசர்கள் திருவிளையாடல்கள் மூலமாகவே தேர்ந்தெடுக்கப்பட்டு வந்தார்கள்!

அந்தத் திருவிளையாடல்கள் மூலமாகவே தலாய் வரிசையிலே மூன்றாவது அரசனாக சோனும் கியாட்ஸோ என்பவன் ஆட்சிப் பீடமேறினான். மதக் கருத்தை வேக வேகமாக அவன் வளர்த்தான். வெளிநாடுகளிலேகூட மதப் பிரச்சாரத்தை நடத்துவதிலே அதிக சிரத்தை கொண்டிருந்தான்!

தாலைலாமா வரிசையிலே ஐந்தாமவனாக—லோப்சாங்—கியாட்சோ, என்பவன் அரச பீடமேறினான். இது வரை ஆட்சிப் பீடத்திலே இருந்த அரசர்களாவது தாங்களெல்லாம் கடவுளின் வழித்தோன்றல்கள் என்று கூறிய அளவோடாவது நிறுத்திக் கொண்டார்கள். ஆனால் லோப்சாங் தானே கடவுள் எனக்கூறி ஆட்சியைத் துவங்கினான். தன் சொல், செயல், சிந்தனையெல்லாம் கடவுளின் தன்மையது......... அதிலே குற்றங் காணவோ எதிர்த்துப் பேசவோ எவரும் முன்வரக் கூடாதென்ற எச்சரிக்கையின் மூலமாக எதேச்சதிகாரத்தைத் துவக்கினான்! கோலாகலங்களை வளர்ப்பதிலும்; அழிந்தும் பிளவுபட்டும் போயிருந்த மடாலயங்களைப் புதுப்பிப்பதுமாக அந்தக் கடவுள் அவதாரம் திபேத்திலே உலவி வந்தது. சீன ஆட்சிக்கும்—திபேத்துக்கும் அப்போதைய தொடர்பு வளர்ந்திருந்ததால்...... லோசாங் சீன விருந்தாளியாக அழைக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டான். வெளிநாடுகளிலும் அந்தக் கடவுள் அவதாரத்துக்குப் புகழ் வளரவே தன் ஆட்சித் துணைக்கு ஸாங்யே கியாட்ஸோ என்பவனை ரீஜண்டாக நியமித்துக்கொண்டது! 1680-ல அந்தக் கடவுள் அவதாரம் மாண்டு

ஒழிந்தது! சூழ்ச்சிக்கார ரீஜண்ட் அரசர் மாண்டதை வெளித் தெரியாமல் மறைத்துவிட்டுத் தன் எதேச் சதிகாரத்தை நடத்திவந்தான்! இந்த சூழ்ச்சியை ட்சாங் யாங்—கியாட்சோ என்பவன் கண்டறிந்து ரீஜண்டை விரட்டிவிட்டு அவனே அரசைக் கைப்பற்றினான். மதுவும், மங்கையுமே என் வாழ்வின் குறிக்கோளெனக் கூறி அவன் ஆட்சி செய்தான் யாரும் சகிக்க முடியாத அளவுக்கு அவனது லீலா விநோதங்கள் நாளுக்குநாள் பெருகிக்கொண்டே வந்தன!

மக்கள் யாரும் விழிப்புற்று, புனிதப்போர்வையில் பல்லன் உலவுகிருனென சந்தேகங் கொண்டுவிட்டால் ஆட்சிபீடம் ஆட்டங்கொடுத்துவிடுமே என மத குருக்கள் மனங்கலங்கினர். ஆகவே, நிலைமை வளர்வதற்குள் அரசனையே தீர்த்துக் கட்ட முடிவு செய்து விட்டனர். அதன் படி அரசன் கொல்லப் பட்டான்! மாண்ட அரசனின் பீடத்தை லாப்சிங்—கேசாங்கியாட்சோ என்பவன் கைப் பற்றிக் கொண்டு ஆட்சியைத் துவக்கினான்!

அரசர்கள் கொலை செய்யப் பட்டு—தொடர்ச்சியாக அந்த நிலை வளர்ந்து வந்தால் மக்களினத்தின் ஒரு சாரர் நாட்டிலே வேதனைக் குரலை எழுப்பினர். ஆட்சி மாறிவந் ததே தவிர ஆளும் முறை மக்களினத்தை வாழ வைப்பதாக இல்லை. எனவே குழப்பம் நாட்டிலே வளர்ந்தது! 1720-ல் அந்த வளர்ந்துவந்த குழப்பம் உச்ச நிலையிலே யிருந்தது. ரீஜெண்ட் கொல்லப் பட்டான். நிலைமையைக் கண்டு அஞ்சிய சீன அரசாங்கம் போர்ப்படை யொன்றை திபேத் துக்கு அனுப்பியது. திபெத்துக்கும்—சீனத்துக்கும் கடுமை யான போர் நடந்து முடிந்த பிறகு...திபேத்தியர் அடக்கப்

பட்டனர். ஜாம்பால் கியாட்சோ என்பவனை சீனர்கள் தேர்ந்தெடுத்து திபேத்தின் அரசனுக்கினர்கள்!

1876-ம் ஆண்டிலிருந்து...1940-ம் ஆண்டுவரை திபெத் ஆட்சி பீடத்திலே எவ்வித குழப்பமுமில்லை. ஆட்சியிலே அமர்ந்திருந்த மன்னர்கள் கொலை செய்யப்படவோ விரட்டியடிக்கப் படவோ இல்லை! மன்னர்கள் அமைதியான முறையிலே மாறிக்கொண்டேயிருந்தனர். ஆனால் மக்களின் நிலையிலே சிறிதளவாவது மாற்றமே இல்லை!

1788-ம் ஆண்டிலே...திபெத் சரித்திரத்திலே திடுக்கிடும் சம்பவமொன்று நடந்து முடிந்தது! திபேத்தின் சூழ்நிலை கெட்டிருப்பதை யறிந்த கூர்க்கர்கள் திபெத்தின்மீது ஆக்ரமிப்பைத் துவங்கினர்! கூர்க்கர்களின் மூர்க்கத் தாக்குதலை சீனப்படை ஓடோடி வந்து எதிர்த்து கூர்க்கர்களை விரட்டி திபெத் ஆட்சியை சீர்படுத்தியது. 1838-ம் ஆண்டு மீண்டும் திபெத் அந்நிய நாடான காஷ்மீரால் தாக்கப் பட்டது. காஷ்மீரிலிருந்த டோக்ராக்கள் (Dogras)...எனப்படுபவர்கள்தான் அந்தத் தாக்குதலை திபெத்மீது துவக்கினர். சீனப்படையின் தீரத்தால் அந்த ஆக்ரமிப்பாளர்களும் விரட்டியடிக்கப் பட்டார்கள். கூர்க்கர்கள் தங்களது இரண்டாவது படையெடுப்பை 1855-ல் திபெத்மீது துவக்கினர்கள். இந்த நேரத்திலே நேபாளத்துக்கும்—திபெத்துக்கும் ஒப்பந்த மேற்பட்டது வியாபாரம் போன்ற துறைகளிலே...எனவே கூர்க்கப் படையெடுப்பு வாபசானது!

1744-ல்—திபெத்மீது பிரிட்டிசாரின் கண் வீழ்ந்தது! எப்படியும் தன் செல்வாக்கை அங்கே நுழைத்துக்கொள்ள ஆங்கிலேயர் படாதபாடு பட்டனர். வாரன் ஹேஸ்டிங்

ளின் சூழ்ச்சித் திட்டத்தால் அப்போதைய கிழக்கிந்தியக் கம்பெனியின் பெயரால்...ஜார்ஜ் போல் என்ற ஆங்கிலே யனை திபெத்துக்கு தூது அனுப்பினார்கள். ஜார்ஜ்போல் முயற்சியிலே தோல்வி யடையவே, 1783-ல் சாமுவேல் டர்னர் என்ற ஆங்கிலத் தளபதியே திபெத்துக்குள்ளே அடி எடுத்து வைக்க முயற்சித்தார். அப்போதைய திபெத்திலே சீனர்கள் பெருவாரியாக செல்வாக்குப் பெற்று திபெத்தின் மூலை முடுக்கெல்லாம் அவர்களாகவே உலவினர். இந்த சந்தர்ப்பத்திலே ஆங்கிலேயர் தங்களது சூழ்ச்சித் திட்டத்தை நடத்த முடியாது போனதோடு...... அவர்கள் திபெத்தினுள்ளே அடி எடுத்து வைக்கவும் அனுமதிக்கப் படவில்லை!

தூதுகள்—மூலமாகப் பயனில்லை என்பதைக் கண்ட ஆங்கிலேயர் 1904-ம் ஆண்டு பெரியதோர் போரைத் துவக்கினர். திபெத்மீது! அப்போதைய ஆட்சியைப் பாதுகாத்து வந்த தலைலாமா மங்கோலியாவுக்கு ஓடி ஒளிந்து கொண்டான். போர் ஒரு முடிவுக்கு வந்து...திபெத்தோடு ஒப்பந்தம்...என்ற பெயரால் ஆங்கிலேயன் தனது சூழ்ச்சித் திட்டத்தை விரித்துத் தனது செல்வாக்கை அங்கேயும் நிலை நாட்டினான்.

ஆங்கிலேயர் நிலைத்து விட்டதைக் கண்ட சீனர் பெரியதோர் படையை திபெத் அனுப்பிவைத்து ஆங்கில செல்வாக்கை மிகுந்த சிரமத்துக்கிடையே ஓரளவு குறைத்தார்கள்! 1911-லே சீனப் புரட்சி புகையாவே...மீண்டும் ஆங்கில ஆதிபத்தியம் தன் செல்வாக்கை விரித்தது. 1920-லே அந்த சூழ்ச்சி வலை மேலும் விரிந்தது. பல இடங்களிலே ஆங்கிலேயர் முயற்சியால் நாகரிகம் திபெத்திலே

அரும்புவிட்டது! பின்னர் இரண்டாம் உலக சந்தர்ப்பத்திலே ஆங்கில செல்வாக்கு சிறுகச் சிறுக அகற்றப் பட்டது! அவர்கள் செல்வாக்கு மறையவே சீனர்கள் நல்ல முறையிலே திபேத்தில் வரவேற்கப்பட்டார்கள். இடையே இப்போது சமீப காலத்திலே பெரிய குழப்பம் ஏற்பட்டு ஒரு வழியாக முடித்து வைக்கப் பட்டது சீனத்தலையீட்டால்! இப்போது திபெத்...சிவப்புச் சீனுவோடு நேச ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிது. இனிமேலாகிலும் திபேத்தியர் வாழ்வு ஓரளவுக்கு வளம்படுமென யாரும் நம்பமுடியும். காரணம் அதன் கூட்டுத் தோழனின் திறமையால்!

மறுமலர்ச்சிப் பாதையிலே நடைபோடும் புதிய சீனத்தோடு கைகோர்த்துள்ள திபெத் விரைவிலேயே பொன் நாடாகத்தான் காட்சிதரப் போகிறது! இத்தனை நாளாக- கொலையையும், மாயாவாதம் பேசிடும் மத குருக்களையுமே கண்டு வந்த திபேத்தியர் இனி புதுமையாளர்களைச் சந்தித்து புன்னகை புரியிலே உலவத்தான் போகிறார்கள்!

# பேரூவீரர்

"மமதை பிடித்தவன்! மாநிலத்தை ஆள்வோனின் பிரதிநிதிகள் நாம், என்பதற்காவது மதிப்புக் கொடுத்து நடந்து வருகிருனு? ஓலமிடுகிருன்! உரிமைகள் பறி போகிறதாம்! நாங்கள் மட்டுமென்ன, எங்கள்—உரிமையை இழந்துவிட இலகுவிலே சம்மதித்து விடுவோமா? சிங்கார வாழ்வு எமது உழைப்பின் பயன்! அவனும் சீமானுக ஆவதுதானே! பத்துப்பேர் சேர்ந்து புரட்சியென்று கத்திவிட்டால் நமது உல்லாசத்துக்கு முடிவு கண்டுவிடலாமென தப்புக் கணக்குப்போட்டு வருகிருர்கள். வெறும் எண்ணக்கோட்டைதான் அது"!

"எண்ணக் கோட்டைதான், அவர்களுடைய ஆவேசச் செயல் என்பதை அவர்கள் உணராமலா யிருக்கிருர்கள்? நீங்களும் நானும்தான் பைத்தியம்! அவர்கள் காரியத் தோடுதா னிருக்கிருர்கள். ஏதோ ஆவேசமாகப் பேசி ஆதாயத்தோடு ஓடி மறைந்துவிடப் பார்க்கிருர்கள்!"

"அப்படி அவர்களை சாமானியர்களாக எண்ணி விடுவது நாமே நமக்கு ஆபத்தைத் தேடிக்கொண்டதாக ஆகிவிடும். எதிரியின் பலத்தை ஆராயாது போரிலே குதித்துவிட்டு கலங்கி நிற்பதுபோல......... ஏதேதோ எக்கச்சக்கமாக வார்த்தைகளை வீசிவிட்டு பின்னர் அல்லல்படத்தான் வேண்டும் நாம் புரட்சிக்காரர்களைப் புல்லர்களென சாதாரணமாக எண்ணிக்கொண்டிருந்

தால்! அவர்கள் கூட்டமாகத் திரண்டு வருகிறார்க ளென்பது மட்டுமல்ல, ஏட்டிலே நமது மறைவு ரகசியங் களை வெளிப்படுத்தி, நாட்டிலே நடமாடவிட்டு வருகின் றனர். சந்து பொந்துகளிலே ஆலைத்தொழிலாளி வேலை செய்துவிட்டு வீடு திரும்பும்போது திறமைமிக்க நம் அரசாங்க ஒற்றர்களின் கழுகுப் பார்வையிலிருந்தும் தப்பி...... அந்த ஏடுகளை...... நம் ரகசியத்தை ஒன்று விடாது எடுத்துச்சொல்லும் ஏடுகளை...... தொழிலாள ரிடம் நீட்டிவிட்டு மறைகின்றனர் புரட்சிப் போக்கினர்! இவ்வளவு சாதுரியத்தோடு பாடுபட்டு வருகின்றனர் நமது சரசச் சல்லாபத்தைச் சாவுக்குழிக்குத் தள்ளுவ தற்காக, இவர்களை அற்பர்களாக நாம் எண்ணி நமது சிந்தையிலிருந்து அவர்களை விரட்டி யடிப்பதோடு நின்று விடக் கூடாதென்பதோடு......அவர்களைப் பூண்டோடு ஒழிக்க அடக்குமுறையை விரிவுபடுத்த வேண்டும்!"

•   •   •   •

சீமான், சீமாட்டிகளை சந்திக்கும்போது விருந்து மண்டபங்களிலே, கனவான்களின் களியாட்ட நிலையங் களிலே, உல்லாச உணவு விடுதிகளிலே...... இன்னும் எங்கெங்கு ஆதிக்க வாசிகள் ஆர்ப்பரிப்போடு உலவி னரோ அங்கெல்லாம் உரையாடல்கள் மேலே தீட்டியபடி நடக்காமலிருக்கவில்லை. தூண்டில் தம்மை நோக்கி வீசப்படுவதைக் கண்ட மீன் வலையிலே சிக்காது தப்பிக் கொள்ளத்தான் எண்ணும்.

அதே போலத்தான் சீமான் கூட்டம் புரட்சிப் போக் கினர் வீசிய வலையிலிருந்து தப்பிக்கொள்ளத் தந்திரங்கள் செய்து வந்தனர். சீமான்களின் பிரதிநிதியாக சிங்கா தனத்திலே ஜார் அமர்ந்திருந்தான். புரட்சிப் போக்கினர் நடத்தை ஜாரையே கலக்கிக்கொண்டிருந்தது! இந்த நேரம் பார்த்து சீமான்களின் பெருவாரியான வேண்டு கோள் வேறு ஆர்ப்பாட்டக்காரர்களை அடக்கும்படி

தனது சக்திகள் முழுவதையும் செலவிட்டு அடக்குமுறை யினால் வெற்றி காணவேண்டுமென்ற முடிவோடு ஜார் உலவிக்கொண்டிருந்தான்.

பீட்டர்ஸ் பர்க் மாணவர்களை மிகுதியாகக் கொண்டிருந்த இடம். கல்லூரியின் அருகிலே அரசாங்க ஒற்றர் களின் கண்காணிப்பு பெரிய அளவிலே! மாணவ சக்திகளை ஒன்று திரட்டினால் புரட்சி வெற்றி முடிவைத் தழுவுமென்பதை ஜாரும் உணர்ந்திருந்தான்—புரட்சிப் போக்கினரும் அறிந்து வைத்திருந்தனர். பெட்ரா செவ்ஸ்கி, புரட்சிக்காரர்களுக்குக் கிடைத்த ஒரு புயல் வேகப் பேச்சாளன். பெட்ரா செவ்ஸ்கி கல்லூரி யருகிலே ஏதாவதொரு மூலைமுடுக்கிலேயிருந்து தோன்று வான்! உடனே அவனைச்சுற்றி பலர் கூடிவிடுவர். அடக்குமுறையை அழகுற எடுத்து கூடியிருப்போர் முன்பு பேசுவான். அவன் சொல் அளவிலே எடுத்துக் கூறிய அடக்குமுறைகளை அங்குக் கூடியிருக்கும் மாணவர் கள் சிறிது நேரத்திலேயே அனுபவ பூர்வமாக சுவைத்து விடுவர். ராணுவத்தினரின் மிருகத் தாக்குதலால் இளம் உடல்கள் சிதறடிக்கப்படும். இப்படி அடக்குமுறை களும் தொடர ஆரம்பித்தன...... பெட்ரா—செவஸ்கியும் ஓயாது எங்காவது ஒரு மூலையிலே தோன்றித் தோன்றி போலீஸாரின் கழுகுப் பார்வையிலே விழாமல்' தப்பி வந்தான். அவன் பேச்சைச்கேட்டு ஆயிரமாயிரமாக அவன் பின்னே மாணவ மணிகள் அணிவகுத்தனர்.

அந்த ஆவேசப் பேச்சால் தட்டி எழுப்பப்பட்டவர் களிலே டாஸ்டோவஸ்கி பிரதான அங்கம் வகித்தான். மாணவன் டாஸ்டோவஸ்கி புரட்சிப் படையிலே அங்கம் வகித்ததும், அவனது சகோதரனும் அப்படியே ஆகி விட்டார். பெட்ரா செவ்ஸ்கியோடு, டாஸ்டோவஸ்கி யும் இரவு பகலாகச் சேர்ந்துகொண்டு புரட்சிக்கு வித்தூன்றி வந்தனர்.

புரட்சிக்கெனப் பணியாற்றிடும் சிலரை அதிலும் குறிப்பிடத் தக்கவர்களைப் பிடித்துவிட அரசினர் படாத பாடுபட்டு வந்தனர். அந்த புயல்வேகப் பேச்சாளனை யும், டாஸ்டோவஸ்கியையும் உடனே பிடித்துத் தூக்கு மேடையிலே நிற்க வைப்பதற்காகச் சதி வழக்கொன்றை யும் அந்த இளைஞர்கள்மீது சுமத்தப்பட்டது! ஜாரின் பரிசிலைப்பெற வேக வேகமாகப் பணியாற்றிய ஒற்றர்கள், பெட்ரா செவ்ஸ்கி, டாஸ்டோவஸ்கி ஆகியோர் உட்பட 30 பேரடங்கிய புரட்சிப் போக்கினரைக் கைதுசெய்து சிறைக் கூடத்துக்கு அனுப்பினர்.

அன்று ருஷியாவிலே "பெட்ரா செவ்ஸ்கி சதி வழக்கு" பிரமாதப் படுத்தப்பட்டது. ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து எட்டு மாதங்கள் ஆகி முடிந்தன அந்தச் சதி வழக்கு முடிவுக் கட்டத்தை நெருங்க! அந்த 30 பேருக்கும் தூக்குத் தண்டனை! தூக்குமேடை அத்தனை இளைஞர்களையும் அழைத்தது! பெட்ரா செவ்ஸ்கி...... பேசினான் பேசினான் புயல்வேகத்திலே, தன் நாட்டவர் உள்ளத்திலே உணர்ச்சி அலைமோதும் அளவிலே! டாஸ்டோவஸ்கி...... எழுதினான் தன் கை ஓயுமளவிலே, ஆனால், தன் மக்கள் விழிப்புப்பெறும் வரையிலே! இந்த இரு குற்றத்தையும் ஜாருக்கு எதிராகச் செய்தார்கள். அந்தச் செய்கை ஜாரின் உயிருக்கே ஆபத்தை அளிப்பதாக அவன் கருதினான். ஆகவே...... அவர்களின் பேச்சும், எழுத்தும்...... சதி என்று விளக்கங்கொடுத்து அவன் சுட்டுவிரல் கண்டு ஆடிய நீதிமன்றம் சதி வழக்குத் தொடர்ந்து சிறந்த பேச்சாளனையும், எழுத்துலகச் சிற்பியையும் தூக்கு மேடை அனுப்பி வைத்தது கருத்துக் குயிலும், எழுத்துச் சிற்பியும் சிறையிலே அடைப்பட்டனர்.

கூண்டிலே அவர்கள் அடைபட்டிருந்தபோது, அவர் களின் பேச்சாலும், எழுத்தாலும் உணர்ச்சி பெற்று நாட்டு விடுதலை வேட்கை உள்ளத்திலே பாய்ந்தோ

வளர்ந்து வந்த மக்கள் சக்தி பெருகியது. உணர்ச்சி யூட்டியவர்களே மகிழ்ச்சி பெருமளவுக்கு ஒரு டாஸ்டோ வாஸ்டோவாஸ்கியை சிறையிலே தள்ளிப் பூட்டுவதால் எழுச்சி ஒன்று பலவாகப் பெருகத்தான் செய்யுமென்பதை அரசினருக்கு புரட்சிக்காரர்கள் விரைவிலேயே புரியவைத்தனர். அவர்களின் தொல்லையை சிறிதாவது மட்டுப்படுத்த எண்ணிய ஜார்......தூக்கு மேடைவரை கொண்டு நிறுத்தப்பட்டு, கழுத்திலே கயிறு மாட்டுகிற வேளையிலே டாஸ்டோ வாஸ்கியையும் அவரது கூட்டுத் தோழர்களையும் அந்த தண்டனையை நிறைவேற்றாது கடுங்காவல் தண்டனையளித்து சைபீரியாவுக்கு அவர்களை அனுப்ப ஏற்பாடு செய்தான்!

பிரெஞ்சுக்கு ஒரு பாஸ்டிலி யிருந்ததைப் போல, ருஷியாவுக்கு ஒரு சைபீரியா! சைபீரியா...அந்தப் பெயரைக் கேட்டதுமே அஞ்சா நெஞ்சர்களும் அலறித் துடித்தனர். உள்ளத்தையும் உடலையும் குலுக்கி நடுங்கிச் சாகடிக்கும் பனிப்பாலை வனத்தை நோக்கித்தான் எழுத்துலகமேதை டாஸ்டோவஸ்கி அனுப்பி வைக்கப்பட்டார். எற்கெனவே அடக்கு முறையால் நொந்திருந்த அவரது உடல் பனியின் கோரத் தாக்குதலால் சிதைவுற்றது. நான்கு வருடங்கள் பனிப்பாலை வனத்திலே ஓடி முடிந்தது.

அந்தப் பாலைவனத்திலே குளிர் சோலையாகக் காட்சி தந்த மாதரசி ஒருவளை டாஸ்கோவஸ்கி தனது வாழ்க்கைத் தோழியராகவே ஆக்கிக் கொண்டார். 1859-ம் ஆண்டு அந்த இருவரையும் ருஷியாவுக்கே அழைத்துக் கொண்டார் நண்பரொருவர்.

டாஸ்டோவஸ்கி ருஷியா திரும்பியதும், தூங்கிக் கிடந்த தனது பேனாவுக்கும், ஓய்வு கொண்டிருந்த தன் சிந்தனைக்கும் திரும்பவும் வேலை கொடுக்க ஆரம்பித்தார். அவர் கண்டு, அனுபவித்த தொல்லைகள்......படிப்போரையும் அத்தகு நிலைக்கே இழுத்து விடும்படியாக......அவ

ரின் ஏடுகளிலே இடம் பெற்றன! "இறந்தவர்களின் வீடு" என்ற அவரது ஏடு இதற்கோர் சரியான எடுத்துக் காட்டு. இறந்தவனை நாம் பார்ப்பதில்லை, பேசுவதில்லை! ஆனால், அவர்களை உண்மையாகவே நாம் பார்த்து அந்த இறந்தவர்களோடு பேசவேண்டுமென்று நாம் விரும்பினால் சைபீரியா சென்றால் அது முடியும் என்று கூறுகிறார். சைபீரியாவிலே உலவுபவர் அத்தனைபேரும் இறந்தவர்கள் என்று தனது "இறந்தவர்களின் வீடு" என்ற ஏட்டிலே குறிப்பிடுவதன் மூலமாக டாஸ்டோவஸ்கி சைபீரியாவின் கொடுமையை அனுபவ வாயிலாக எடுத்துக் காட்டுகிறார். அந்த நாவல் "இறந்தவர்களின் வீடு" வெளியானதும், அது ருஷியாவையே ஒரு கலக்குக் கலக்கி விட்டது. புரட்சி அந்த நேரத்திலே மந்தமாக்கப் பட்டிருந்தது! பொதுப் படையாக பார்வையிட்ட எல்லோருமே டாஸ்டோவஸ்கியைப் புகழ்ந்தனர்......அவர் எழுத்துக்கு மதிப்புதரும் முறையிலே!

பல பதிப்பகங்கள் அவரின் எழுத்துக்காகக் காத்திருந்தன. புகழும் வளர்ந்தது. பிலின்ஸ்கி போன்ற மதிப்புரையாளர்கள் டாஸ்டோவஸ்கியை மேதை என்று அழைக்க ஆரம்பித்தனர். சிறையிலே சிதைக்கப்பட்டதற்குப் பிறகு அவரின் வாழ்வு புதிய பாதைநோக்கிப் பயணம் துவங்கியது! தொல்லைத் தேவிக்கு இந்த நிலை சகிக்கவில்லை. மறுபடியும் அவரின் வாழ்விலே வேதனையை சதிராடவிடத் திட்டமிட்டாள். அவரின் அன்புத்தோழியர் நோயால் படுக்கையில் சரண்புகுந்தாள். அந்தப் பாலைவனத்து அழகியை சுடலை அணைத்துக் கொண்டது! தனிமையிலே இனிமை காணாத டாஸ்டோவஸ்கி இரண்டாண்டுக்குப் பின் ருஷியநாட்டு அழகியொருத்தியைத் தனது வாழ்க்கைத் துணை நலம் ஆக்கிக்கொண்டார்.

டாஸ்டோவஸ்கி தன் எழுத்தை நம்பித்தான் வாழ்ந்தார்! புரட்சி மந்தமாயிருந்ததால் அவரது கூட்டுத்தோழர்கள் வெளியே உலவுவதே சிரமமாயிருந்தது. இந்த நிலை

யிலே தன் குடும்பத்தை முழுதும் நடத்துவதற்குத் தன் எழுத்தை மட்டும் நம்பிப் பயனில்லாததால் நண்பர்களைக் காணும்போது, அவர்களின் சிபார்சை முன்வைத்து கடன் வாங்கி வந்தார். கடன் பெருகிற்று! தான் அணிந்திருந்த சட்டைகளையே பல நாள் அணியவேண்டிய நிலைமையிலே டாஸ்டோவாஸ்கி வாழ்ந்தார்.

ஆனல், வறுமைத் தொல்லையின் லீலா விநோதங்கள் வளர்ந்த அந்த நேரத்தில்தான் அவரின் எழுத்துக்களிலே ஜீவசக்தி ஓட ஆரம்பித்தது புதுமைப் பாதையிலே. கடன் காரன், தாழ்வாரத்திலே நின்று கொண்டிருப்பான். மனைவி என்னென்னவோ சமாதானம் கூறி வந்தவரை வழி அனுப்பிவைக்க முயற்சித்துக் கொண்டிருப்பாள்...... அதே நேரத்திலே டாஸ்டோவஸ்கி ஏடும் எழுதுகோலு மாக சிந்தனைக் குகையிலே புகுந்து அங்குக் கண்டவைகளை யெல்லாம் கொட்டிக் கொண்டிருப்பார் அமைதியே உரு வாக! உண்ண உணவில்லை யென்றாலும், தன் பேனாவுக்கு மை வாங்க காசிருந்தால் போதுமெனக் களித்திருப்பார். அவர் எழுத்தோவியங்கள் புத்தகங்களாக வெளிவந்தன சில பதிப்பகத்தினர்களின் தயவால்! அவரின் எழுத்துக்கு மதிப்புத்தந்த பதிப்பகத்தார் அவர் வாழ்வு வளமடைய வேண்டுமே என்று கவலைப்படவில்லை!

சிறையிலே டாஸ்டோவாஸ்கினுக்கு வலிப்பு நோய் பரிசாகக் கிடைத்தது! அந்தத் தொல்லை வேறு! ஏதாவது உயரிய இலக்கியம் உருவாகும்போது நோய் தனது வேலை யைத் துவக்கிவிடும். பேனாப் பிடித்த கரம் துள்ளித்துள்ளி சில நேரம் கழித்து ஆடி ஓடியும் நோய் சற்று நின்றது போலத் தெரிந்ததும் மறுபடியும் விட்ட இடத்திலே

யிருந்து இலக்கியத்தைத் தொடர ஆரம்பிப்பார். நோயும்—அவரும் தொடர்ந்து நடந்திய போராட்டதுக்கிடையே உருவானதுதான் "முட்டாள்", "சூதாட்டக்காரன்" போன்ற உயரிய இலக்கியங்களெல்லாம். "குற்றமும்—தண்டனையும்" என்ற நாவல் அப்போதைய ருஷியாவிலே நல்ல முறையிலே மதிக்கப் பட்டது. அப்போதைய ருஷியாவிலே டாஸ்டோவஸ்கி போன்றவர்கள் குற்றக் கூண்டிலே ஏற்றப்பட்டு அநீதித் தண்டனை தரப்பட்டதை அப்படியே சுவைகுன்ருது அந்த நாவலிலே எடுத்துக் காட்டினுர்.

நல்ல எழுத்தாளர்; உண்மையைக் கூறுகிருர் என்ற புகழ்தான் அவரை வந்து தாக்கிக் கொண்டிருந்தது; அவரின் வாழ்வு மேலும் மேலும் கோணலாகிச் சென்றது! ஒருநாள் இரவில் யாருமாறியா வேளையிலே ருஷியாவை விட்டே புறப்பட்டுவிட்டார்.

"ஏ! நன்னிரவே நீயாவது எனக்குப் பாதுகாப்பு அளித்தாயே! நான் ஏடெடுத்து என் எழுத்தோவியத்தைத் தீட்டிக் காட்டினேன்! என் நாட்டவர் நலத்தை நாடித்தான் காலமுழுவதும் அப்படிச் செலவழித்தேன். அவர்கள் உதவவில்லை...இதோ நான் ஓடுகிறேன் நாட்டை மறந்து; வீட்டைமறந்து. ஏன் என்னையேமறந்து நடந்து கொண்டிருக்கிறேன். கடன்காரன் இந்த நேரத்திலும் என்னை அடையாளங் கண்டுவிடாமல் நள்ளிரவே நீஒன்ருவது என்னேடு ஒத்துழைக்கிருயே......அதுவேபோதும்!... டாஸ்டோவஸ்கியின் உள்ளத்திலே இதுபோல எண்ண அலைகள்! உள்ளம் எதை எதையோ எண்ணி பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கக் கால்கள் வேக வேகமாக அடி

எடுத்து வைத்துக் கொண்டிருந்தன—கடிவாளமில்லாத குதிரைபோல!

அரசியலாரின் அடக்குமுறை அம்புகள் டாஸ்டோவாஸ்கியின் உடலையும், உள்ளத்தையும் துளைத்தபோதும், அவருடல் நாட்டுப் பணிக்காக தூக்குமேடை வரை கொண்டுபோய் நிறுத்தப் பட்ட போதும் அஞ்சா நெஞ்சனுகி நின்றூர் அந்த கர்மவீரர்! ஆனல் வறுமைத்தொல்லை கலங்காத அவர் உள்ளத்தையும் கலக்கிவிட்டது! முதலிலே சிலநாள் எழுத்திலே எண்ணத்தைத் திருப்பி தொல்லையை மறக்க முயற்சித்தார். பின்னர் கோர உருவத்திலே வளர்ந்து வந்த தொல்லைகள் அவரின் உள்ளத்தைத் சிறுகச் சிறுக வாட்டி வீட்டை விட்டே ஓட்டி விட்டது!

ஓடிக்கொண்டே யிருந்த டாஸ்டோவஸ்கி பாரிஸிலே போய் நிலையாகத் தங்கிஞர். கையிலே காசில்லை, ஆடையோ அரை நிர்வாண உடையில், நீண்டு வளர்ந்த கேசங்கள் முகத்திலும் தலையிலும்......இந்த உருவத்தோடு உலவிய அவரை பாரிஸ் வாசிகள் பைத்தியமோவென்று எண்ணி நகைத்தார்கள். அவர்களின் எண்ணத்துக்கு இடம்வைப்பது போலத்தான் அவரும் நடந்துகொண்டார்! வேக வேகமாக ஏதாவது ஒரு பெரிய ஹோட்டலுக்குள்ளே டாஸ்டோவாஸ்கி போய் நுழைதார்! யார் என்ன வேண்டுமென்று கேட்டாலும், பதிலே பேசாது அங்குள்ள புத்தகங்களையும், செய்தித்தாள்களையும் படித்து விட்டு வெளியே வந்துவிடுவார்! இது அவரது தினசரி வேலையிலே ஒன்று. பெரிய பாங்கிகளின் முன்னல் பாரிசிலே, ஆவலோடு டாஸ்டோவாஸ்கி நின்று கொண்டு ......ருஷியாவிலிருந்து தனக்கு யாராவது பணமனுப்பி

யிருந்தால் எவ்வளவு நலமாயிருக்கு மென்று புண்ணிக் கொண்டே பைத்தியம் போல மணிக்கணக்காக அங்கேயே நிற்பார். இதையெல்லாம் கவனித்து வந்த பாரிஸ்வாசிகள் பைத்தியம் என்றே தீர்மானமாக முடிவு கட்டி விட்டார்கள்......ஆனுல் நல்ல வேளையாக அந்தப் பெயரால் அழைக்க ஆரம்பிக்க வில்லை!

இப்படி அவர் பாரிசிலே வீதி வீதியாக வந்தபோது ருஷியாவிலே அவர் ஏடுகள் மிகப்பெரிய அளவிலே வெளியாகிக் கொண்டிருந்தன! அவரின் எழுத்தோவியங்கள் எல்லாமே ஒன்றுவிடாமல் அச்சு ஏறிவிட்டன! அச்சேறாத எழுத்து ஒன்றும் பாக்கியில்லை என்று தெரிந்ததும்தான் பதிப்பகத்தாரும் இலக்கிய ரசிகர்களும் டாஸ்டோவாஸ்கி எங்கே என்று வலைபோட்டுத் தேட ஆரம்பித்தார்கள்! பாரிசிலே அவர் உலவிக்கொண்டிருப்பதை யறிந்ததும் ருஷியாவுக்குத் திரும்பி வரும்படி டாஸ்டோவாஸ்கியின் பழைய நண்பர்கள் உட்பட வேண்டினுர்கள்.

நொந்துபோயிருந்த டாஸ்டோவஸ்கியும் அவர்களின் அழைப்பை ஏற்று மகிழ்ந்து தனது 49-வது வயதிலே ருஷியாவிலே அடியெடுத்து வைத்தார்! பூரிப்பின் எல்லையிலே நின்று ருஷியா முழுவதுமே அவரை வரவேற்றது! எழுத்துச் சிற்பி சொந்த நாட்டை விட்டோடி மறைந்தொழிந்து ருஷியாவுக்குக் களங்கத்தை உண்டாக்காமல் டாஸ்டோவஸ்கி உயிருள்ளபோதே மீண்டும் தன் நாட்டவரால் அழைத்துக் கொள்ளப்பட்டதற்காக......... ருஷியாவின் விடிவெள்ளிகள் மகிழ்ந்தன.

டாஸ்டோவஸ்கி ருஷியா வந்ததும்... விட்டுப்போன இடத்திலிருந்து தனது இலக்கியப் பணியைத் துவக்க ஆலோசித்தார்! நண்பர்களும், பல பதிப்பகத்தாரும் அவரின் இலக்கியப் பணிக்கு கைகொடுக்க முன்வந்தார்கள். அந்த உதவிகளை சரியாகப் பயன்படுத்திக் கொண்டு பல சுவையான இலக்கியங்களை வடித்துத் தந்தார். டாஸ்டோவஸ்கியின் புகழ் பரவப் பரவ நாட்டு மக்களிடையே பரபரப்பு அதிகப்பட்டது! எழுத்திலே எழுச்சியை யூட்டும் புரட்சித் தோழரை நேரிலே கண்டு அவரின் தேன் சுவைக் கருத்துகளிலே மிதந்திடவேண்டும் என்று சிதைந்துகொண்ட மக்கள் துடிதுடித்து நின்றனர். அந்த நேரம் பார்த்துப் புரட்சிக்கவி புஷ்கின் நினைவு நாள்விழா வந்து சேர்ந்தது!

மக்களின் அடங்காத ஆவலை அடக்க டாஸ்டோவஸ்கியும் புஷ்கின் விழாவிலே பேச அழைக்கப்பட்டிருந்தார். விழாவிலே அவர் பேச எழுந்தார்...... ருஷியாவே அங்கே திரண்டுநின்று போற்றியது வாழ்த்தொலியால்! இன்றும் இலக்கிய ரசிகர்கள் டாஸ்டோவஸ்கியின் அன்றைய பேச்சைக் குறிப்பிடும்போது, "புஷ்கின் விழாவிலே டாஸ்டோவஸ்கியின் உணர்ச்சிப் பேச்சு எல்லோரையுமே சிலையாக்கிவிட்டது! அவர் பேச்சுக்குப் பின் நடைபெற இருந்த விழா நிகழ்ச்சிகள் நடைபெறவில்லை! அவரின் பேச்சோடு விழா நிகழ்ச்சி முடிந்தது...... காரணம் அவருக்குப்பின் பேசுவோர் டாஸ்டோவஸ்கி ஆகிவிட மாட்டார்களென்ற எண்ணத்திலே மக்கள் எழுந்து விட்டார்கள்!"......... என்று குறிப்பிட்டுப் பேச்சிலே அவர் மக்களைக் கவர்ந்த விதத்தையும் குறிப்பிடுவார்கள்!

டாஸ்டோவஸ்கி இம்மாதிரியான புகழையெல்லாம் தாங்கிக்கொண்டு தம் வாழ்வுப் பாதையிலே 60 ம் ஆண்டிலே கால் வைத்தார். அவரை அடிக்கடி வாட்டிக் கொண்டிருந்த வலிப்பு நோயின் தொல்லை அவர் கரத்தைக் கெட்டியாகப் பிடித்துச் சவக்குழிக்கு அழைத்துக்கொண்டிருந்தது! அந்த அழைப்பையும் 1881-ம் ஆண்டு பிப்ரவரி 9-ந்தேதி ஏற்றுக்கொண்டார்.

எழுத்திலே புதுமைகண்ட அந்த எழுச்சி வீரனின் அமைதிபுரிப் பயணத்திலே சித்தங் கலங்கியோர் எத்தனை எத்தனையோ பேர்! துக்க ஆடையோடு, துடிதுடித்துக் கூடினர் மேதைகள்! டாஸ்டோவஸ்கி இறுதியாக ருஷியாவைச் சுற்றி ஊர்வலமாக எடுத்துச் செல்லப் பட்டு சுடலையின் சுந்தரப் புன்னகைபோடு கலந்து விட்டார்! அவரின் மயான ஊர்வலத்திலே சைபீரியாவில் ஜார் சர்வாதிகாரியால் டாஸ்டோவஸ்கிக்குப் பூட்டப் பட்டிருந்த விலங்கு பீட்ரோகிரட் மாணவர்களால் எடுத்துச் செல்லப்பட்டது! பொது உடைமைச் சமுதாயம் பூக்க வேண்டுமென்ற காரணத்துக்காக தூக்குமேடைவரை டாஸ்டோவஸ்கி நின்று விட்டுத் திரும்பினர்.

உரிமை முழக்கத்தைப் பிறர் உள்ளத்திலே பதிய வைப்பதற்காக ஏடு தீட்டுகிருன் என்ற காரணத்தைக் காட்டி சைபீரியாவின் பனிப் பாலைவனத்திலே அவரை சிறைவைத்தார்கள். எழுச்சி உள்ளம் எத்தர்களின் எக்களிப்பால் அடங்கிவிடக் கூடியதல்ல! எலிகள் புலிகளாகிடும் சூழ்நிலையைத்தான் வளர்த்து விடும் எதேச்சதிகாரிகளின் செயல் என்பதைத்தான் டாஸ்டவேஸ்கியின் வாழ்வு உலகஆதிபத்தியர்களுக்கு அறிவித்துக்கொண்டிருக்கிறது!

பேனுவுக்குமுன்—பேனுவை வைத்து வெற்றி கண்டு விடமுடியவில்லை ஜாருக்கு! பேனுத் தளபதியோடு—பேனு தளபதியாக ஜார் மோதி வெற்றிகாண முடியவில்லை! பேனுத் தளபதியோடு...... சண்டமாருதம் புரியும் சர்வாதிகாரியான ஜார் மோதினன்! ஆவேசத்தையும் ஆர்ப்பையுங் காட்டி ஆமையராக ஊமையராகப் பேனுத் தளபதிகளை ஆக்கிடலாமென எண்ணினன்! பேனு வென்றது! வாள் தோற்றது!!

# முற்றும்

